உ

கணபதி துணை

சீனிச்சர்க்கரைப் புலவர்

இயற்றிய

# புகையிலை விடு தூது

பதிப்பாசிரியர்:

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

 1939 [விலை இரண்டணா.

# முகவுரை

---

தூதுப் பிரபந்தங்கள் இந்த நாட்டிலுள்ள இலக்கிய மொழிகள் எல்லாவற்றிலும் உண்டு. தமிழ்ப்பிரபந்தங்களில் ஏனையவை பெரும்பாலும் தமிழுக்கே உரியனவாயிருப்பத் தூதைமாத்திரம் எல்லாமொழிப் புலவர்களும் தம் செய்யுட்டிறத்தைக் காட்டுவதற்குரிய சாதனமாக மேற்கொண்டமை அப்பிரபந்தத்தின் சிறப்பைப் புலப்படுத்தும். காளிதாஸ மகாகவி பாடிய மேகஸந்தேசம் ஒரு மேகவிடு தூதே. அதனைப் பின்பற்றி நூற்றுக்கணக்கான காவியங்கள் வடமொழியில் எழுந்துள்ளன.

தூதுநூல்கள் இருவகைப்படும். தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் அவள்பால் விடுப்பது ஒருவகை; தலைவனது அருள் வேண்டித் தலைவி விடுப்பது ஒருவகை. தமிழில் இவையிரண்டும் கலிவெண்பாவால் அமைக்கப்படும்.

புலவர்கள் கடவுளர் மீதும், ஆசிரியர் மீதும், உபகாரிகள் மீதும் பாடிய தூதுப்பிரபந்தங்கள் பலவாகும். தூதாகச் செலுத்தப்படும் பொருள் உயர்திணையாகவும் அஃறிணையாகவும் இருக்கும். அஃறிணைப்பொருள்கள் தூது சென்றுவரும் ஆற்றலுடையனவல்லவாயினும் காமமயக்கத்தால் அவற்றிற்கு அவ்வாற்றல் இருப்பதுபோலப் பாவித்து உரைப்பதாகச் செய்யுள் செய்வது புலவர் மரபு.

இவ்வாறு பொருள்களைத் தூதுவிடும் செய்தியைச் சொல்லும் செய்யுட்கள் தமிழில் தொன்றுதொட்டு வித்துவான்களாற் பாடப்பெற்றுள்ளன. தனிப்பிரபந்தமாக வழங்குதல் பிற்காலத்தில் உண்டானதென்றே தோற்றுகின்றது.

தூதுப்பொருள்கள் பத்தென்பது பழைய வரையறை;

"இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
பயம்பெறுமே கம்பூவை பாங்கி—நயந்தகுயில்
பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே
தூதுரைத்து வாங்குந் தொடை"

என்னும் இரத்தினச் சுருக்கச் செய்யுளில் அப்பத்தையும் காணலாம். புலவர்கள் இயற்றியுள்ள தூதுப்பிரபந்தங்களை ஆராயின் இவ்வரையறைக்கு மிஞ்சிய பலபொருள்கள் தூதுப்பொருள்களாகச் செய்யுட்கு உதவுவதைக் காணலாம். வித்துவான்கள் தத்தம் கருத்துக்கும் கற்பனைக்கும் ஏற்ற பொருள்களைத் தூதுவிடுவதாக அமைப்பதே வழக்கமாக இருக்கின்றது.

ஒருவரைப் புகழ்ந்து பாடுவதற்குத் தூதுப்பிரபந்தங்களைப் புலவர்கள் பயன்படுத்துவதைப்போல், இகழ்ந்து பாடுவதற்கும் இப்பிரபந்தம் ஒரு கருவியாவதுண்டு. மிதிலைப்பட்டிக் கவிராயர்களுள் ஒருவர் தமக்கு இடையூறு செய்த ஒருவர்மீது "கழுதைவிடு தூது" என்று ஒரு பிரபந்தம் இயற்றியுள்ளார். அத்தூது ஒரு வசைப் பிரபந்தம்.

பாட்டுடைத் தலைவருக்கு ஏற்ற பொருளைத் தூது விடுதலும், புலவர் தம் விருப்பத்திற்குரிய பொருளைத் தூதுவிடுவதாக அமைத்தலும் வழக்கம்.

புகையிலைவிடுதூது என்னும் இது சீனிச்சர்க்கரைப் புலவரென்பவரால் பழனிமலையிற் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ பாலசுப்பிரமணியக் கடவுள்மீது இயற்றப்பெற்றது; ஒரு தலைவி புகையிலையை அக்கடவுள்பால் தூதனுப்புவதாக அமைந்தது. இது 59 கண்ணிகளை உடையது. இத்தூதில் புகையிலையின் பெருமைகளே முதல் 53 கண்ணிகளில் சொல்லப்படுகின்றன. தூதுவிடும் செய்தி ஏனைய ஆறுகண்ணிகளிற் சுருக்கமாக அமைந்துள்ளது. இதனால் இதைப் பாடிய புலவர் புகையிலையைச் சிறப்பிப்பதற்காகவே இதனைப் பாடியிருக்கவேண்டுமென்று தெரிகின்றது.

பாட்டுடைத் தலைவரான பழனியாண்டவருக்குப் புகையிலைச் சுருட்டு நிவேதனமுண்டென்று சிலர் சொல்லக் கேட்டதுண்டு. விராலிமலையில் அத்தகைய நிவேதன முண்டென்று தெரிகின்றது. இந்தப் புலவருக்கும் புகையிலை போடும் வழக்கம் இருக்கலாம். இந்த இயைபுகளே இந்தப் பிரபந்தத்தைப் பாடுவதற்கு

காரணமாக இருந்தனபோலும். புகையிலை மிகுதியாகப் பயிரிடப் படுகின்ற இடங்கள் சூழ்ந்த பழனிக்கு அருகில் வசித்த உபகாரி ஒருவர் கேட்டுக்கொள்ள இயற்றியதாகக் கூறுவதும் உண்டு.

இதன் ஆசிரியராகிய சீனிச்சர்க்கரைப் புலவரென்பவர் பரம் பரைப் புலமை வாய்ந்த குடும்பத்தில் உதித்தவர். இராமநாதபுரம் ஸம்ஸ்தான வித்துவானாக விளங்கிய சர்க்கரைப் புலவரின் குமாரர்; மயூரகிரிக்கோவை இயற்றிய சாந்துப் புலவரின் தம்பியார். இவ ருடைய காலம் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 19-ஆம் நூற் றாண்டின் முற்பகுதியுமாகும். இவர் திருச்செந்தூர்ப் பரணி யென வேறொரு பிரபந்தமும் இயற்றினரென்று கூறுவர்.

இப்பிரபந்தத்தில் புகையிலையின் பெருமையும், புகையிலையி னாற் செய்யப்படும் சுருட்டு, சாராயம், பொடி என்னும் பொருள் களைப்பற்றிய பாராட்டும் காணப்படும். புகையிலைக்குத் திருமா லும், சிவபெருமானும், பிரமதேவரும், தமிழும், முருகக்கடவுளும் சிலேடைவகையில் உவமை கூறப்படுகின்றனர். புகையிலையின் காரமும், பித்தந்தரும் இயல்பும், மலர் வித்து என்பவற்றையுடை மையும், பாடஞ் செய்யப்படுதலும், தாகத்தைத் தீர்க்க உதவுத லும், வியாபாரத்தால் லாபம் உண்டாக்குதலும் அங்கங்கே சொல் லப்படும்.

தமிழுக்கும் புகையிலைக்கும் சிலேடையமைந்த பகுதியில் கோவை, வளமடல், சந்தப்பா, பரணி என்பன குறிக்கப்பெறு கின்றன.

புகையிலையின் வரலாறாக இப்பிரபந்தத்திலே கூறப்படும் கற்பனைக்கதை வருமாறு:—

ஒருமுறை மும்மூர்த்திகளுள்ளே ஒரு வழக்கு உண்டாயிற்று. அதனைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டு அவர்கள் தேவர்கள் கூடியுள்ள சபைக்குச் சென்று தம் வழக்கை எடுத்துரைத் தனர். தேவர்கள் அவற்றைக் கேட்டபின், "உங்கள் வியவகாரத் தைப் பிறகு கவனித்துக்கொள்வோம்" என்று சொல்லி அம் மூவர்களிடத்தும் வில்வம், திருத்துழாய், புகையிலை என்னும் இவற்றைக் கொடுத்து இவற்றை மறுநாள் கொண்டுவரச் சொல்லி யனுப்பினர்.

அவர்கள் மூவரும் அங்ஙனமே சென்றனர். சிவபெருமான் பாற் கொடுத்தபத்திரமாகிய வில்வத்தைக் கங்கையின் அலை கொண்டு

போயிற்று; திருமாலிடம் கொடுத்த திருத்துழாயைப் பாற்கடலி லுள்ள அலை கொண்டு போயிற்று. பிரமதேவர் தாம் பெற்ற புகையிலையைத் தம் நாவிலுள்ள கலைமகளிடத்திற் கொடுத்துவைத் திருந்தார்.

மறுநாள் மூவரும் விண்ணவர் சபைக்கு வந்தபோது தேவர் கள், "முன்னே நாம் கொடுத்தபத்திரங்களைக் கொடுங்கள்" என்று கூறவே சிவபெருமானும் திருமாலும் விழித்தனர்; "எங்கள் பத்திரங்கள் போயின" என்று அவர்கள் கூறினர். அது கண்டு மகிழ்ச்சியுற்ற பிரமதேவர் கலைமகளிடத்திலிருந்து புகையிலையை வாங்கி, "இதோ, எனக்கு அளித்த பத்திரம்" என்று முன்வைத்து, "மற்றவர்கள் பத்திரங்கள் போயின; என்னுடையது போகையிலை" என்று கூறினர். அவர் கூற்றில் புகையிலையென்பதன் மரூஉ வாகிய போகையிலையென்னும் பெயர் தோற்றியது; பிரமதேவரிட மிருந்து நழுவாமல் அவருக்கு உரியதானமையின் அதனைப் பிரம்ம பத்திரம் என்று யாவரும் அன்றுமுதல் வழங்கலாயினர். பிரம தேவர் தாம் கூறிய வழக்கில் வெற்றிபெற்றனர். ஏனை இருவரும் தம் வழக்கிழந்தனர்.

புகையிலையைப் பற்றி நம் நாட்டில் பல வேறு கற்பனைக் கதைகள் வழங்கிவருகின்றன. அவற்றுள் ஒன்றை இப்புலவர் இப்பிரபந்தத்தில் அமைத்தார்.

புகையிலைச் சுருட்டைப் பற்றிய செய்திகளாக இதில்வருவன: புகையுடையது, தம்பம் போல்வது, அனலேந்துவது, நுனியிற் சாம்பலையுடையது; ஆகாயம் சுருட்டுப் புகை போல இருப்பதால் இறைவர் ஆகாயமே தம் திருமேனியாக ஆனாரென்பர்.

"கற்றுத் தெளிந்த கனடாபல வான்களுமுன்
சுற்றுக்கு ளாவதென்ன சூழ்ச்சியோ"

என்பது சுருட்டை நினைந்து பாராட்டியது.

புகையிலைக்காம்பு என்பது வழக்கு; அதனை யமைத்து,

"தாம்பூல நாவுக்குச் சாரமது தானுமுன்றன்
காம்பி லடக்கமன்றோ கட்டழகா"

என்று இவ்வாசிரியர் புகழ்கின்றார்.

புகையிலையினால் செய்யப்படும் பொடியின் மகிமை,

"வாடைப் பொடிகதம்ப மானவெல்லா முன்னுடைய
சாடிப் பொடிக்குச் சரியுண்டோ"

என்ற கண்ணியிலே சொல்லப் பெறுகின்றது.

ஒரு சிட்டிகைப்பொடிக்காகத் தம் நிலையையும் மறந்து பிறரைக் கெஞ்சும் மனிதர் பலரை நாம் பார்க்கிறோம். இப்புலவரும் அத்தகையோரைப் பார்த்திருக்கிறார்;

"சொற்காட்டு நல்ல துடிகார ரானை
பற்காட்ட விட்ட பழிகாரா"

என்ற கண்ணியே அதற்கு அடையாளம்.

புகையிலை விளையும் இடங்களாகக் காங்கேயம், யாழ்ப்பாணம், அழகன்குளம், பரத்தைவயல் என்பனவும், கானக்கறுப்பனென்னும் புகையிலைச்சாதியும் இவரால் உணர்த்தப்பெறுகின்றன. எல்லாவற்றிலும் பரத்தைவயலில் விளையும் புகையிலையே சிறந்ததென்று இவர் கூறுகின்றார்.

புகையிலைக்கு இவ்வளவு சிறப்புக்கூறும் இப்புலவருக்கு அது 'தமிழ் போல நாவில் விளையாடி'யது என்று கொள்வதிற் பிழையொன்றுமில்லை.

புகையிலை இந்த நாட்டிற்கு வந்த புதிய பொருள். ஆயினும் அதனைப் பாராட்டிய புலவர்கள் இவரையன்றி வேறு சிலரும் உண்டு. அதனைப்பற்றிய தனிப்பாடல் ஒன்று வருமாறு:

"நாலெழுத்துப் பூடு நடுவே நரம்பிருக்கும்
காலுந் தலையுங் கடைச்சாதி—மேலாக
ஓட்டு முதலெழுத்து மோதுமூன் றுமெழுத்தும்
விட்டாற் பரமனுக்கு வீடு."

[நாலெழுத்துப் பூடென்றது புகையிலையை. காலும் தலையுமென்றது அப்பெயரிலுள்ள முதலும் கடையுமாகிய எழுத்துக்களை; அவை புலை யென்பன; புலை - கடைச்சாதி. முதலெழுத்தும் மூன்றுமெழுத்தும் விட்டால் எஞ்சி நிற்பன, கைலை என்னும் இரண்டெழுத்துக்கள்; கைலை, சிவபெருமான் இருப்பிடம்.]

பொடியைப்பற்றி வழங்கும் தனிப்பாடல் ஒன்று வருமாறு:

"ஊசிக் கழகு முனைமழுங் காமை யுயர்ந்தபர
தேசிக் கழகிந் திரிய மடக்க னெறிகலன்சேர்
வேசிக் கழகின் னிசைபல நூல்கற்ற வித்வசனர்
நாசிக் கழகு பொடியெனக் கூறுவர் நாவலரே."

மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணாக்கரும் கும்பகோணம் காலேஜில் தமிழாசிரியராக இருந்தவருமாகிய வித்துவான் ஸ்ரீ. தியாகராச செட்டியார் திருவானைக்காவில் பொடி வியாபாரம் செய்யும் சோமசுந்தரம் பிள்ளை என்பவரையும் அவர் விற்கும் பொடியையும் சிறப்பித்து ஒரு சமயம் ஒரு செய்யுள் இயற்றினார். அது வருமாறு:

"கொடியணி மாட மோங்கிக் குலவுசீ ரானைக் காவிற்
படியினி லுள்ளார் செய்த பாக்கிய மனையான் செங்கைத்
தொடியினர் மதனன் சோம சுந்தரன் கடையிற் செய்த
பொடியினைப் போடா மூக்குப் புண்ணியஞ் செய்யா மூக்கே."

இவற்றைப்போல வேறு சில செய்யுட்களும் உண்டு. அவை இப்போது கிடைக்கவில்லை.

இந்தச் சிறுபிரபந்தத்தைக் கலைமகள் வாயிலாக வெளியிடுவதற்கு இடமளித்த ஸ்ரீமான் ரா. நாராயணஸ்வாமி ஐயரவர்களுடைய அன்பு பாராட்டுதற்குரியது.

'தியாகராஜ விலாசம்'
திருவேட்டீசுவரன்பேட்டை
14—8—39

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்

உ

கணபதி துணை

சீனிச்சர்க்கரைப் புலவர்

இயற்றிய

# புகையிலை விடு தூது

---

[திருமாலுக்கும் புகையிலைக்கும் சிலேடை]

1. சீர்தந்த மாநிலத்திற் செல்வப் பயிர்தழைப்ப
நீர்தந்த பச்சை நிறங்கொண்டே—ஏர்தந்து

2. கார மணிந்து கனநீரிற் கண்வளர்ந்து
பாரை மணந்து படியளந்து—சாரமுடன்

3. எல்லார்க்கு மாலா யிசைந்து பரந்தோங்கிப்
பல்லா யிரவடிவம் பாரித்தே—அல்லாமல்

4. அம்புகையிற் சாரங்க மான தனுவெடுத்துத்
தம்ப வரிவடிவந் தானாகிச்—சொம்புடனே

---

1. செல்வப்பயிர் - செல்வத்தை அளிக்கும் பயிர், வளப்ப மிக்க புகையிலைப் பயிர். நீர்தந்த பச்சைநிறம் - நல்ல நீர்மையைத் தந்த பச்சைநிறம், நீரால் தரப்பெற்ற பசியநிறம். ஏர் - எழுச்சி.

2. காரம் - மேகத்தினது அழகு, புகையிலைக் காரம். பாரை மணந்து - பூமிதேவியை மணம் செய்துகொண்டு, பூமியோடு பொருந்தி. படி அளந்து - பூமியை அளந்து, வியாபாரம் செய்வோருக்குக் கூலி கொடுப்பதற்குக் காரணமாகி.

3. மால் - திருமால், மயக்கம். பாரித்து - தாங்கி.

4. **திருமாலுக்கு**: அம்பையும் திருக்கரத்திற் சாரங்கமென்னும் வில்லையும் எடுத்துத் தூணில் நரசிங்க வடிவத்தோடு தோன்றி. **புகையிலைக்கு**: அழகிய புகையிலே சார்ந்த உடலாகிய உருவத்தை யெடுத்துத் தூண் போன்ற வரிகளையுடைய வடிவத்தை யுடையதாகி; சுருட்டாக உபயோகப்படும் நிலையைக் குறித்தபடி. வரி - புகையிலையிலுள்ள நரம்புக் கோடுகள். சொம்பு - அழகு.

[சிவபெருமானுக்கும் புகையிலைக்கும் சிலேடை]

5. தோலுரியும் போர்த்துத் துலங்கவன லேந்திநிறை
பாலத்து வெண்ணீறு பாலித்தே—கோலமுள்ள

6. பாசடையுங் கொண்டு பசுங்கொழுந்து பாலுகந்து
காசடையா ருக்கருமை காண்பித்துக்—காசினியில்

7. அம்பலத்துண் மேவிநிறைந் தங்காடி நின்றுநல்ல
தம்பமெனப் பித்தேறித் தாணுவாய்—இன்பமுடன்

8. நன்பிரமை கொண்டு நலத்திரு னற்பதங்கொண்
டன்பர்சுமை தாங்க வரனுமாய்—பண்பாய்

[பிரமதேவருக்கும் புகையிலைக்கும் சிலேடை]

9. மறைவாய் வளர்ந்து மனுக்களுண்டு பண்ணி
நிறைவாய நாலுமுக நேர்ந்து—பிறர்தேரு

---

5. **சிவபெருமானுக்கு:** யானைத் தோலாகிய உரிவை மேலே போர்த்து, விளங்கும்படி திருக்கரத்திலே நெருப்பை ஏந்தித் தம் திருநெற்றியிலே வெண்ணீற்றை யணிந்து; தோல் - யானை. பாலம் - நெற்றி. **புகையிலைக்கு:** தோலாகிய போர்வையைப் போர்த்து (சுருட்டு நிலையி லிருக்கும்போது) நெருப்பை ஏந்திச் சாம்பலையும் கொண்டு.

6. **சிவபெருமானுக்கு:** வில்வம் முதலிய பசிய இலையை (அன்பர்கள் பூசிக்க) மேற்கொண்டு, பசிய கொழுந்து போன்ற உமாதேவியாரை ஒரு பக்கத்திலே ஏற்றருளி, குற்றமடையாத தூயவர்களுக்கு அரிய பொருளாகிய முத்தியைக் காட்டி; **புகையிலைக்கு:** பச்சையிலையைக் கொண்டு பசிய கொழுந்தையும் பக்கத்திலே உடையதாகிப் பொருளில்லாதாருக்கு அரியதாகி. அடை - இலை. பால் - பக்கம். காசு - குற்றம், பொருள். அருமை - அரிய முத்தி, அரிதாதல்.

7. **சிவபெருமானுக்கு:** சிற்சபையிலே பொருந்தி நிறைந்து அங்கே திருநடனம் செய்து நல்ல தூணைப்போலப் பித்தேறித் தாணுவென்னும் பெயருடையோராய்; **புகையிலைக்கு:** சபைகளிலே நிறைந்து கடைத்தெருவிலே நின்று நல்ல தூணைப்போலப் பித்த குணம் மிக்குத் தம்பம்போன்ற உருவத்தை உடையதாகி. அங்காடி - கடைத்தெரு. தாணு - சிவபெருமான், தூண்.

8. பிரமை - பித்து, மயக்கம்.

9. மறைவாய் - வேதத்தினிடத்திலே, மறைவாக. மனுக்கள் **உண்டுபண்ணி** - மனிதர்களைச் சிருட்டித்து, மனிதர்க்குரிய கள்ளை

10. வாசவனஞ் சேர்ந்து மலர்க்கொம்பு தாங்குதலாற்
றேசு தரும்பிரம தேவனுமாய்—நேசமுள்ள

11. முத்தே வருமாய் மூளைத்தெவருங் கொள்ளவரும்
சித்தே புகையிலையே செப்பக்கேள்—வித்தகமாய்

[தமிழுக்கும் புகையிலைக்கும் சிலேடை]

12. ஏடதனை யாய்ந்தே யிலகுபதி கஞ்சேர்த்துப்
பாடமது போற்றிமொழி பன்னியே—கூடுபல

13. கோவை புனைந்து குறித்து வளமடல்சேர்
பாவுசந்த மேவிப் பதங்கொண்டு—சேவைபெறக்

14. கட்டமைந்து நற்பரணி கண்டுவிலைக் கானபின்பு
செட்டமைந்து பின்மதுரஞ் சேரவே—மட்டில்லாத்

15. தாவில்பல வித்தையுடைத் தாகித் தமிழ்போல
நாவில் விளையாடு நாமகளாய்ப்—பூவுலகில்

[புகையிலையின் வரலாறு]

16. வந்த புகையிலையுன் மாமகத்து வங்களைநான்
எந்த விதமென் றியம்புவேன்—விந்தையதாய்

---

உண்டுபண்ணி; புகையிலையிலிருந்து ஒருவகைச் சாராயம் உண்டாக்குவர். நாலுமுகம் - நான்கு திருமுகங்கள், நான்கு திசையிலும்.

10. வாசவனம் சேர்ந்து - வாசஞ்செய்யும் அன்னப்பறவையைச் சேர்ந்து, தங்குதற்குரிய ஜலத்திற் சேர்ந்து.

12. ஏடு - பனையோலை, இலை. பதிகம் - தேவாரப்பதிகம், நடுவதற்குரிய செடி. பாடம் - மூலபாடம், பக்குவஞ்செய்தல்.

13. கோவை - ஒருவகைப் பிரபந்தம், கோத்த தொடர். வளமடல் - ஒருவகைப் பிரபந்தம், வளப்பமுள்ள இலை. பாவுசந்தம் - பரவிய செய்யுட்சந்தம், பரவிய அழகு. பதம் - செய்யுட்பாகம், பக்குவம்.

14. கட்டு - யாப்பு, கட்டுதல். பரணி - ஒரு வகைப் பிரபந்தம், சாடி.

15. வித்தையுடைத்தாகி - வித்தைகளையுடையதாகி, விதைகளையுடையதாகி.

16. மகத்துவம் - பெருமை.

17. மூவரொரு வர்க்கொருவர் முன்னொருகால் வாதாகித்
தேவ சபையகத்துச் செல்லவே—மேவிவிண்ணோர்

18. உங்கள்விவ கார முரைப்போம்பின் னாகவென்று
தங்குமொவ்வோர் பத்திரம தாகவே—அங்கவர்பாற்

19. கூவிளமும் பைந்துளவுங் கொள்ளும் புகையிலையும்
தாவளமாய்க் கைக்கொடுத்துத் தாமனுப்ப-ஆவலுடன்

20. பின்மூவ ரந்தப் பெருஞ்சபையில் வந்தவுடன்
முன்கொடுத்த பத்ர முறைப்படியே—அன்பினுடன்

21. தாருமென்ற போதிற் சதாசிவனார் பத்திரமும்
கார்வண்ணர் பத்திரமுங் காணமல்—நேரான

22. கங்கை யிடத்துங் கவின்பாற் கடலிடத்தும்
பொங்குமலை தான்கொண்டு போகவே—இங்கிதஞ்சேர்

23. ஓகையுட னேபிரம னுற்ற நமதுபத்ரம்
போகையிலை யென்று புகன்றுடனே—வாகுகலை

24. வாணிதிருக் கையினின்றும் வாங்கியிந்தா வென்றுவைக்க
நாணியிரு வோரு நயவாமற்—பூணும்

25. வழக்கிழக்கச் செய்தந்த வானோர்முன் வெற்றி
விளக்கவுன் னாமம் விளக்கத்—துளக்கமொடு

26. ப்ரம்மபத்ர மென்றெவரும் பேசவே வந்துதித்த
தன்மப் புகையிலையே சாற்றக்கேள்—இன்னம்

---

17. மூவர் - மும்மூர்த்திகள்.

19. கூவிளம் - வில்வம். தாவளமாய் - பற்றுக் கோடாக.

20. பத்ரம் - இலை.

21. சதாசிவனார் பத்திரம் - வில்வம். கார்வண்ணர் பத்திரம் - துளசி.

22. கங்கையின் அலை வில்வத்தைக் கொண்டு போயிற்று; பாற்கடலின் அலை திருத்துழாயைக் கொண்டுபோயிற்று.

23. ஓகை - மகிழ்ச்சி. போகையிலை - போதல் இல்லை; புகையிலை 'போகையிலை' என்று மரூஉ வழக்கிலே வழங்குவது இங்கே நினைப்பதற்குரியது.

25. துளக்கம் - நடுக்கம்.

[புகையிலையின் பெருமை]

27. குடியாத வீடு குணமாகா தென்றும்
விடியாதென் றுங்கூறல் வீணோ—படிமேற்

28. குடியா தவனுநீ கொற்றவன்கா ணுன்னைக்
குடியா தவன்சா குடியே—வடிவாக

29. எட்டுமா சித்திதரு மேகசித்து மூலிகைக்கும்
இட்டமா நீகலப்ப தில்லையே—திட்டமுடன்

30. வாடைப் பொடிகதம்ப மானவெல்லா முன்னுடைய
சாடிப் பொடிக்குச் சரியுண்டோ—நாடியே

31. கற்றுத் தெளிந்த கனப்ரபல வான்களுமுன்
சுற்றுக்கு ளாவதென்ன சூழ்ச்சியோ—மற்றொப்பில்

32. ஆகாய முன்புகைபோ லானமையா லேயரனார்
ஆகாய மேகாய மாயினார்—வாகான

33. தாம்பூல நாவுக்குச் சாரமது தானுமுன்றன்
காம்பி லடக்கமன்றோ கட்டழகா—வீம்பாகப்

34. பூராய மான பொருளை வெளிப்படுத்தும்
சாராயந் தானுனக்குத் தம்பியோ—நேரா

---

28. குடி ஆதவனும் நீ. சா குடி - சாவுங்குடி.

30. வாடைப்பொடி - வாசனைப்பொடி. கதம்பம் - ஒருவகை வாசனைப்பொடி. சாடிப்பொடி - ஜாடியிலே வைத்துள்ள பொடி. சரி - ஒப்பு.

31. சுற்று - சுருள்.

32. ஆகாயமானது உன் புகைபோல இருப்பதனாலேதான் சிவபெருமான் அவ்வாகாயமே தம்முடைய திருவுருவமாயினார். காயம் - திருவுருவம்.

33. காம்பு: புகையிலைக் காம்பு என்பது வழக்கு. 'வகை தொகையில்லாத கணக்கும் புகையிலையில்லாத பாக்கும் வழ வழ கொழ கொழ' என்பதொரு பழமொழி.

34. பூராயம் - பூர்ணம்.

35. அதனகா மீசுரமா யார்க்குமயல் பூட்டும்
மதனகா மீசுரமச் சாறே—விதனமற

36. மோகப் பயிராய் முளைத்த புகையிலையே
தாகப் பயிரான சஞ்சீவீ—ஆகத்தின்

37. அச்ச மகற்றுவிக்கு மாண்பிளை நீ யுன்றனக்கோர்
அச்சமகத் துக்குவர லாகுமோ—விச்சையுடன்

38. காரமுங் காயக் கடுமையுமுண் டாமுனக்கோர்
ஈரவெங்கா யப்பகையு மேதையா—கூரும்

39. தகையிலையன் றேதெரியுந் தானுன் னருமை
புகையிலையே தெய்வப் பொருளே—சகமேவும்

40. பூத்தான மாகப் பொருந்துதிரு மாதுவளர்
பூத்தான மான புகையிலையே—பார்த்தாய்ந்து

41. நண்ணிய மாதவத்தோர் நாடோறுந் தேடுகின்ற
புண்ணிய மான புகையிலையே—எண்ணியெண்ணிக்

42. கொத்தடிமை யாக்கிக் குடிகுடியா யாண்டுவரும்
புத்தமுத மான புகையிலையே—வர்த்தனைசேர்

---

35. அதன் அகா - அந்தச் சாராயத்திற்குள்ளே இருப்பவனே. மீசுரமாய் - அதிகமாக. மதன காமீசுரம் - கஞ்சாக்கலந்த மதனகாமேசுர லேகியமென்னும் மருந்து; எழுவாய். விதனம் - துக்கம்.

38. காயக்கடுமை - சம்பாரத்தின் உறைப்பு. புகையிலைக் காரத்துக்கு மேலே காரமின்மையால், ஈர வெங்காயத்தைப் பிறர் உண்ண அஞ்சினாலும் புகையிலை போடுவோர் அதனை அஞ்சாது உண்பாரென்னும் கருத்தை நினைந்து கூறியது இக்கண்ணி. ஈர வெங்காயம் - பச்சை வெங்காயம். கூரும் - மிகுதியாகும்.

39. உன் அருமையைத் தகை இலையன்றே தெரியும் - உனது அருமையைத் தகுதியையுடைய வெற்றிலையன்றே அறியும். வெற்றிலை இலையெனவும் வழங்கும்.

40. பூவைத் தானமாகப் பொருந்துந் திருமாது. அத்தகைய திருமாதும் பூமியும் உனக்குத் தானப் பொருளாகும் புகையிலையே. பணங்கொடுத்துப் புகையிலை வாங்குவதனாலும் நிலத்திலே புகையிலையைப் பயிரிடுவதனாலும் இவ்வாறு உரைத்தார்.

42. வர்த்தனை - விற்பனை.

43. லாபமும் வர்த்தகர்க்கு நம்புவிடர் கட்குச்சல்
லாபமுங் காட்டு நயக்காரா—சோபமுடன்

44. வெட்டுண்டு பின்னே வெயிலிற் கிடந்தாலும்
கட்டுண்டு வந்ததென்ன காரணங்காண்—தொட்டாற்

45. குறுகுறுத்துத் தும்முங் குணத்துடனே பின்னும்
கிறுகிறுப்ப தென்ன கெறுவம்—முறுகப்

46. பகைக்கட்டாய்க் கட்டும் படுசூலைக் கட்டும்
புகைக்கட்டா லோடாதோ போக—நகையாக

47. முன்பொருமலையை முனிந்துவெகு வாய்மலைபோற்
றன்பொருமலைத்தீர்க்குஞ் சாமியே—அன்பாகப்

48. பாவியுனை நட்டுப் பலன்காணுர் தம்மைமுழுப்
பாவியென்று சொல்வார் பலருமே—நாவினுற்

49. சொற்காட்டு நல்ல துடிகார ராரையும்போய்ப்
பற்காட்ட விட்ட பழிகாரா—கற்கவென்று

50. பார்த்திப ரான பரத்தை வயற்குடியார்
போற்றி வளர்க்கும் புகையிலையே—தோத்திரமாம்

51. காங்கயம் யாழ்ப்பாணங் கானக் கறுப்பனுடன்
பாங்குபெறு குள்ளம் பலவாக—நீங்கா

---

43. சோபம் - துயரம்.

44. கட்டு - புகையிலைக்கட்டு; தேகக்கட்டென்பது வேறு பொருள்.

47. முருகக்கடவுளாகக் கூறியபடி; முன்பு ஒரு மலையை முனிந்து மலைபோன்ற வருத்தத்தைத் தீர்க்கும் முருகக்கடவுளே; சாமி - முருகக்கடவுள். **புகையிலைக்கு:** முன்னாலே பொருகின்ற நீரினது அலையை முனிந்து, மலைபோலக் குவிக்கப்பெற்று, மனிதனது பொருமலைத் தீர்க்கும்; பொருமல் - துன்பம்; வயிற்றுப் பொருமலுமாம்.

48. பாவி உனை நட்டு - பரப்பி உனனை நிலத்திலே நட்டு; பரவி உன்னை நண்பாக்கியென்பது வேறுபொருள்.

49. துடிகாரர் - சுறுசுறுப்புள்ளவர்.

50. பரத்தைவயல்: ஓரூர்.

52. அழகன் குளமுதலா மானசரக் கெல்லாம்
பழகு முனக்கிணையோ பார்க்கின்—புளகமது

53. கொண்ட புகையிலையே கொள்ளு மெனதுமயல்
உண்டதனை நின்பா லுரைக்கக்கேள்—வண்டிசைந்த

4

[பழனியாண்டவர் பெருமை]

54. பூங்கடப்ப மாலையான் போரசுரர் தங்களுயிர்
வாங்கடப்ப வேலையான் வாலவுருப்—பாங்குபெறு

55. கந்தன் முருகன்வேள் காங்கேயன் வள்ளிபுணர்
சொந்தமண வாள துரந்தரிகன்—அந்தம்

56. தருபழனி யூரனெங்கள் சண்முகவேள் வீதிக்
கொருபவனி மாமயின்மே லுற்றான்—வருபவனி

[தூது சென்றுவர வேண்டுதல்]

57. சேவிக்க யான்போய்த் தெரிசிக்கு மவ்வளவிற்
கோவித்து மாரனம்பு கொல்லவே—ஆவலுடன்

58. ஆகினே னென்மயக்க மாருரைப்பா ருன்னையன்றி
வாகுபெற நீபோய் வகையாக—ஓகையுடன்

59. சென்றுரைத்துத் திண்புயமேற் சேர்ந்திலங்கு பூங்கடப்ப
மன்றல்கமழ் தார்வாங்கி வா.

---

51-2. பல ஊரில் விளைவனவும் பல பெயர் உள்ளனவுமாகிய புகையிலையின் வகைகள் பரத்தைவயற் புகையிலைக்கு இணையில்லை யென்றபடி.

54. அடப்ப வேலையான் - அடம்பு படர்ந்த கடற்கரையை யுடையவன். வாலவுரு - பாலசுப்பிரமணியத் திருவுருவம். துரந்தரிகன் - துரந்தரன்; காரியத்தை முடிக்கும் ஆற்றலுடையோன்.

57-8. ஆவல் உடன் ஆகினேன் - உடனே ஆசையுடைய வளாயினேன்.

# திரு இலஞ்சி முருகன் உலா

பதிப்பாசிரியர்
மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
டாக்டர் உ. வே. சாமிநாதையர்.

கலைமகள் வெளியீடு - ௩

உ

முருகக்கடவுள் துணை

மேலகரம் பண்டாரக்கவிராயர் இயற்றிய

# திரு இலஞ்சி முருகன் உலா

(குறிப்புரையுடன்)

—:o:—

பதிப்பாசிரியர்:

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடம்
மயிலாப்பூர்.

பவ ௵ தை ௴

1935

 [விலை அணா 5.

# இப்புத்தகத்திலடங்கியவை

உ
கணபதி துணை

# முகவுரை

---

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கண் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

—கந்தரலங்காரம்.

**பா**ட்டுடைத்தலைவன் வீதியிற் பவனிவருகையில் எழுபருவத்தை யுடைய பொதுமகளிர் அவனைக் கண்டு மயங்கியதாகப் புலவராற் புனைந்து கலிவெண்பாவாற் பாடப்பெறும் தமிழ்ப் பிரபந்தம் உலாவாகும். இஃது உலாப்புறமெனவும் வழங்கும்; புறவுலாவென்பது அங்ஙனம் மாறிவந்ததென்பர் சங்கரநமச்சிவாயர்; நன்னூல், சூ. 267, உரை.

தலைவன் பவனிவருதல் காப்பியங்களிலும் சிறப்பித்துப் பாராட்டப்பெறும். பெருங்கதையில், 'நகர்வலங்கொண்டது' என்னும் பகுதியிலும், சீவகசிந்தாமணியிலும், கம்பராமாயணத்தில் உலாவியற்படலத்திலும் அவ்வக்காப்பியத் தலைவர்களுடைய பவனிச்சிறப்புக்கள் கூறப்பட்டுள்ளன.

உலாவிற் கூறப்படும் எழுபருவமகளிரும் பொதுமகளிரென்பதை, 'பக்குநின்ற காமம் ஊரிற் பொதுமகளிரோடு கூடிவந்தவிளக்கமும் பாடாண்டிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர். அது பின்னுள்ளோர் எழுபருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச்செய்யுளாம்', 'இனிஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது' (தொல். புறத். சூ. 30—31, உரை) என்னும் பகுதிகளால் நச்சினார்க்கினியர் வற்புறுத்தியிருக்கின்றனர். கற்புடையமகளிர் பிறரைக்கண்டு காமுறுதல் அறமன்றாதலின் இவ்வரையறை அமைந்ததென்று தோற்றுகின்றது. உதயணன் உலாவந்தகாலத்தில் கற்புடைமகளிரல்லாத ஏனையோர் அவனைக் கண்டு காமுற்றனரென்பதைப் புலப்படுத்தி,

"ஞாலங் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளி ரொழிய மற்றைக்
கன்னிய ரெல்லாங் காமன் றுரந்த
கணையுளங் கிழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லா நிறைவளை நெகிழ"

(பெருங்கதை, உ. 7: 53-7)

எனக் கவிஞர்பெருமானாகிய கொங்குவேளிர் அமைத்திருக்கும் பகுதியும், சீவகன் உலாவருகையில் ஆசி கூறிய மாதரைக் கற்புடை மகளிரென்றும் மயங்கிய மாதரைக் கற்புடை மகளி ரொழிந்தோரென்றும் (சீவகசிந்தாமணி, 456-7) நச்சினார்க்கினியர் விளக்கி எழுதியிருக்கும் உரையும் இவ்வரையறையைப் புலப்படுத்தி நிற்றல் இங்கே அறிதற்குரியது.

உலாப்பிரபந்தத்தில் ஏழுமகளிருடைய பருவங்களுக்கேற்ற செயல்களாகிய சிற்றிலிழைத்தல், சிறுசோறடுதல், கழங்கு பந்து அம்மானையாடுதல், கிளி பூவைமுதலியவற்றோடு குலவுதல், யாழ் வாசித்தல, பொழிலாட்டு, புனல்விளையாட்டு, மலர்விழாவெடுத்தல், ஊசல் முதலியனவும் பாட்டுடைத்தலைவனது சிறப்புக்களும் தசாங்கமுதலியனவுமாகியவற்றிற் சில குறைந்தும் குறையாமலும் வரும்.

திரு இலஞ்சி முருகனுலாவென்பது இலஞ்சியென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள முருகக்கடவுளைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டு பாடப்பெற்றது. இலஞ்சியென்பது திருநெல்வேலியைச் சார்ந்த திருக்குற்றாலத்துக்கு வடக்கே உள்ளதாகிய பழைய சுப்பிரமணியஸ்தலம்; திருக்குற்றாலத்துக்குரிய பரிவாரஸ்தலங்களுள் ஒன்றாக விளங்குவது. இங்கே அகத்தியமுனிவராற் பிரதிஷ்டை செய்யப்பட்ட இருவாலுகேசரென்னும் திருநாமத்தையுடைய சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கின்றனர்; இங்கே பிரமதேவர் முதலியோர் பூசித்துப் பேறுபெற்றுள்ளார். இதற்குரிய ஸ்தலவிருட்சம் மகிழ் (இலஞ்சி—மகிழ்.) இத்தல விஷயமாக ஸ்ரீ அருணகிரிநாதரால் இயற்றப்பெற்ற திருப்புகழ் சில உண்டு.

இந்நூலாசிரியர் திருக்குற்றாலத் தலபுராணம் முதலியவற்றை இயற்றிய கவிஞர்பெருமானாகிய மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயருடைய முதற்புதல்வராகிய பண்டாரக்கவிராய ரென்பவர்.

---

* உலாக்களின் இலக்கணங்களும் பிறவும் இதற்குமுன் என்னாற் பதிப்பிக்கப்பெற்ற உலாக்களின் முகவுரைகளால் அறியலாகும்.

பண்டாரமென்பது முருகக்கடவுள் திருநாமங்களுள் ஒன்று. இந்நூலில், "செய்யதிரு நாமஞ் சீரடியேற் கன்றளித்த, மெய்யன் றிருமலைமேல் வீற்றிருப்போன்" (400) என்று உள்ள குறிப்பால் இந்நூலாசிரியர் முருகக்கடவுளுக்குரிய திருநாமங்களுள் ஒன்றை யுடையவரென்பது தெரிகிறது. இவர் செய்தனவாக வேறு நூல் ஒன்றும் காணப்படவில்லை. இந்நூலினால், இவர் முருகவேளிடத்துப் பேரன்புடையாரென்பதும் திருக்குற்றாலத்தலத்தில் ஈடுபாடுடையவரென்பதும் தெரியவருகின்றன. பிற உலாக்களிற் புலவர் பலர் அமைத்துள்ள பலவகைமரபுகளை அறிந்து அவற்றிற் சிலவற்றை இதில் அங்கங்கே அமைத்திருக்கின்றார். இதன் நடையைப் பார்க்கும்போது இளமைப்பிராயத்தில் இந்நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கவேண்டுமென்று தோற்றுகின்றது. இந்நூலில் உள்ள கண்ணிகள் 460; காப்புச்செய்யுள் 2; வாழ்த்துச் செய்யுள் 1.

இந்நூலால், இத்தலம் மிகப்பழமையுடையது என்பதும் (9, 14), முருகவேளாற்படைக்கப்பட்ட தென்பதும் (18—25), பிரமதேவர் (11) இந்திரன் (12) முதலியவர்கள் இங்கே பூசித்துப் பேறுபெற்றனரென்பதும், அகத்தியர் திருக்குற்றாலத்துக்குப் போகும்வழியில் இங்கே முருகக்கடவுளை வழிபட்டு இருவாலுகேசமூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தனரென்பதும் (37—48), இத்தலம் தென்னாரியநாட்டைச் சார்ந்ததென்பதும் (387), சித்திராநதி இதற்குமுரியதென்பதும் (389), இங்கே கந்தஷஷ்டியில் திருத்தேர்விழா நடைபெறுமென்பதும் (83) தெரியவருகின்றன. இங்கே திருக்கோயிலில் சரவணமண்டபம் (91) என்னும் பெயரையுடைய மண்டபம் ஒன்று உண்டு; இங்குள்ள நந்தவனம், "உய்யானம் பாடி"(317), உய்யானஞ்சென்றே" (424) என்பவற்றிற் கூறப்பட்டுள்ளது. இந்நூலாசிரியருடைய காலத்தில் திருத்தேர்விழா தொண்டைவேளாளரும் வண்டீரென்னும் ஊரினருமாகிய சாமிநாதர் என்பவரால் நடத்தப்பெற்றது (81—2.) இக்கோயிற்பணிக்கொத்தைச் சார்ந்த புன்னைவனக்குருக்கள், மண்டலிகன்ஆண்டான், ஸ்தானீகன்முத்தையன் என்பார் இதிற் கூறப்படுகின்றனர். திருவிழாக்காலத்தில் முருகக்கடவுள், முதல்நாள் பிரமதேவராகவும் இரண்டாம்நாள் திருமாலாகவும் மூன்றாம்நாள் உருத்திர மூர்த்தியாகவும் நான்காம்நாள் மகேசுவரராகவும் ஐந்தாம்நாள் சதாசிவமூர்த்தியாகவும் ஆறாம்நாள் வெள்ளிமயில் வாகனாரூடராகவும் திருக்கோலங்கொண்டு உலாவந்து ஏழாம்நாள் திருத்தேரிற் பவனிவருவது வழக்கம் (84—8.)

அகத்திய முனிவர் இத்தலத்தில் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து வழிபட்டபின்னர்த் திருக்குற்றாலஞ்சென்று திருமாலைச் சிவபிரானைச் செய்து வழிபட்டுத் துதித்ததாக உள்ளபகுதியில் திருக்குற்றாலப்புராணத்திலுள்ள வரலாறுகள் பல சுருக்கிக் கூறப் பட்டுள்ளன. இந்தத்தலம் திருக்குற்றாலத்தோடு தொடர்புடைய தென்பது இப்பகுதியால் விளங்குவதோடு, "சித்திரமா மன்றத் திருநடனத் தானருள்வி, சித்திரமா மன்" (198), "திரிகூடத் தோன்ற லொருமகனை" (284), "திரிகூடத் தைம்முகனார் வேண்ட வரும், ஆறுமுகன்" (401—2), "திரிகூடத்தேவன்—நயமாகத், தந்தபிள்ளை" (419—20), "வற்ற வடவருவி யான்மைந்தன்" (436) என்பவற்றாலும் புலப்படுகின்றது. கந்தபுராணத்திலுள்ள செய்தி களாகிய முருகக்கடவுள் திருவவதாரம் முதலியன இந்நூலின் முத லிலும், அரிவைப்பருவத்தில்அரிவை சித்திரமெழுதிக்காட்டுவதாக அமைந்துள்ளபகுதியிலும் சொல்லப்பட்டுள்ளன. இதிற் கூறப் பட்டுள்ள சுப்பிரமணியஸ்தலங்கள்: கதிர்காமம், கந்தமாதனம், குன்றுதோறாடல், சோலைமலை, திருச்செந்தூர், திருத்தணிகை, திருப்பரங்குன்று, திருமலை, திருவாவினன்குடி, திருவேரகம், வள்ளியூர், வேள்விமலை என்பன.

முருகக்கடவுளே திருஞானசம்பந்த மூர்த்திநாயனாராக அவ தரித்தாரென்னுங்கொள்கையினர் இவ்வாசிரியரென்பது, "பாவ னைத்தும், வாசிதீர் காசுபெற மண்டலத்திற் சொன்னவனை" (151—2), "பெண்ணைப்பெண் ணாக்கிவிடப் பேதலித்த தாகா மல்" (167), "கோலுசமண், ஆற்றை யொழியவைத்தா யல்லையோ" (168-9), "வாசிபெறக் காசுமுன்னாள் வாங்கினோன்" (237) என்ப வற்றால் அறியப்படுகிறது. "திருமுருகாற்றுப்படையைச் செப்பிய நக்கீரன், வெருவு பயந்தவிர்த்த வீரன்" (66), "அற்புறுநக், கீரன் புகண்மாலை யேந்தினீர்" (165—6), "கீரன் மெய்யாமொழி" (227) என்பவற்றில் நக்கீரதேவரையும், "பாடுந் திருப்புகழைப் பன்னி ரண்டு நற்புயமும், சூடுங் கருணைச் சுவாமி" (68), "திருப்புகழும், சேர்ந்தசெவிக் கொண்டருளிச் செய்தபின்னர்" (113) என்பவற் றில் திருப்புகழையும், "ஆசிலாப், பாவி லருணகிரி பைந்தமிழின் மாரிபெய்ய, நாவிற் றிருப்பெயரை நட்டோனை" (152—3), "கந்த ரனுபூதி சொன்னகிளி" (205), "போத வருணகிரி" (227) என்பவற்றில் அருணகிரிநாதரையும், 113-ஆம் கண்ணியில் கந்த புராணத்தையும், 227-ஆம் கண்ணியில் பொய்யாமொழிப்புலவரை யும்பற்றிய செய்திகள் வந்துள்ளன. முருகவேளுக்குரிய கார்த்தி கைத்திருநாளும் (427) கந்தஷஷ்டிவிரதமும் (437) இதிற்கூறப் படுகின்றன.

இந்நூலாசிரியர் பேதையைப்பற்றிக்கூறுகையில் அப்பருவத்திற்குரிய சிற்றிலிழைக்கும் செய்தியை அமைக்கின்றார். அவள் குதலைச் சொல்லை, "பன்னியுரைக்கும் பதினெட்டுப் பாஷையன்றி, இன்னமொரு பாஷை பேசுமொழியாள்" (178) என்று வருணித்திருத்தல் இன்பத்தை ஊட்டுகிறது. "குஞ்சரத்தை யிந்தக் குடத்தடைத்துத் தாருமென்றே, பஞ்சரிக்கு மந்தப் பருவத்தாள்', (183) என்பதில் பேதைப்பருவமனப்பான்மையைத் தெளிவாகப் புலப்படுத்துகிறார்.

பெதும்பைப்பருவத்தில் அப்பருவத்துக்குரிய கழங்காடலும் மங்கைப்பருவத்தில் மங்கை பந்தாடுதலும் சொல்லப்படுகின்றன. பந்தாட்டத்தைப்பற்றிக் கூறியுள்ள பகுதியில் அமைந்துள்ள சந்தம் இடத்துக்கு ஏற்றதாக விளங்குகின்றது.

மடந்தைப்பருவத்தில் மடந்தை முருகவேளைத் துதித்து யாழ் வாசித்தாளென்ற செய்தி காணப்படுகிறது. அப்பகுதியில் இசை நூற்செய்திகள் சிலவும், காந்தாரி, காம்போதி, கல்யாணி, தேவ காந்தாரி, மாளவி, தோடி, வராளி, மலகரி, வராடி, நாட்டை, பயிரவி, பூபாளம், மோகனம், முகாரி, செயசாட்சி என்னும் இராகப்பெயர்களும் சொல்லப்படுகின்றன.

அரிவைப்பருவத்தில் அரிவை முருகவேள் திருவிளையாடல்களை ஓவியத்தில் எழுதிப் பிறருக்கு எடுத்துக் கூறுவதாக ஒரு செய்தி உள்ளது. தெரிவைப்பருவத்தில் முருகவேளுக்குரிய தசாங்கங்கள் கூறப்படுகின்றன. அவை வருமாறு:—(1) மலை: கந்தமாதனம், (2) நாடு: தென்னூரியநாடு, (3) நகர்: இலஞ்சி, (4) ஆறு: சித்திராநதி, (5) யானை: ஐராவணம், (6) படை: வேல், (7) கொடி: சேவல், (8) முரசு: மும்முரசு, (9) மாலை: கடம்பு, (10) ஆணை: குமரன்றாணையென்னும் ஆணை.

பேரிளம்பெண்பருவத்தில் பேரிளம்பெண் யாவரினும் இளமையையுடையவர் யாரென்று வேதியர்களைக்கேட்க, அவர்கள் ஒவ்வொருவராக எடுத்துக் கூறிப் பிறகு முருகவேளே என்றும் இளமையையுடையவரென்னும் முடிவுக்குவருவதாக ஒருசெய்தி கூறப்படுகிறது. அன்றி, இப்பருவத்தினள் ஒருகடப்பங்கன்றைக் கொண்டு அதற்கு முருகக்கடவுள் திருநாமத்தை இட்டு வளர்த்து அது மலர்ந்தகாலத்தில் அதன்மலரை முருகவேளுக்கு அணிய எண்ணினளென்ற வரலாறு காணப்படுகிறது. திருவாரூருலாவில், பெதும்பைப்பருவப்பெண் ஏழு செவ்வந்திச்செடிகளை ஆதிவிடங்கர் முதலிய ஸப்தவிடங்கருடைய திருநாமமிட்டு வளர்த்துவந்து வீதிவிடங்கரென்னும் பெயரையுடைய செடி மலர அதன்மலரைத்

திருவாரூர்த் தியாகராசப்பெருமானுக்குச் சூட்ட எண்ணிரு வென்றாள்ள பகுதியைப் பின்பற்றி இஃது அமைக்கப்பெற்றது போலும்.

யமகம், திரிபு, சந்தம், மடக்கு, சிலேடை, உவமை முதலியவற்றை இந்நூலில் அங்கங்கே காணலாம். "பாந்தத் தயலென்றும் பாரவவ்வில் ரண்டென்றும், மாந்தர்களை யேவு மதர்விழியாள்" (372), "ஒற்றின், தொடையாம் பதினெட்டிற் சொன்னபதின் மூன்றே, இடையர் யுடைய விடையாள்" (375—6) என்பவற்றில் நெடுங்கணக்கைப்பற்றிய செய்திகளாற் சில பொருள்களை இந்நூலாசிரியர் அமைக்கின்றார். பச்சம் (179), குமிந்து (266), ரண்டு (306), போச்சுது, வாச்சுது (443) முதலிய மரூஉமொழிகளும், "உனதுசித்தம்" (16), "காரியமோ வீரியமோ" (453) என்னும் உலகவழக்குக்களும்; அளகை (132), கொஞ்சம் (449, 451), கதம்பு (269), கோரித்து (299), சரப்பளி (268), சாளுவை (422), செக்கணி (270), சொம்பு (371), பஞ்சரித்தல் (183), பாந்தம் (113), பிசிப்பு (265), பெண்டுவைத்தல் (365, 451), பேதலித்தல் (167) மூப்பியர் (211), வங்கணம் (455) முதலிய பதங்களும் இதில் இடம்பெற்றுள்ளன.

இந்நூலின் ஏட்டுப்பிரதியொன்று பல வருஷங்களுக்கு முன் திருவாவடுதுறையாதீனத்தில் திருமுகப்பணிவிடை இயற்றி வந்த ஸ்ரீமுத்துக்குமாரசாமி பிள்ளையவர்களிடமிருந்து கிடைத்தது. இஃது எளிய நடையில் அமைந்திருத்தலின் மிகச்சுருக்கமாகவே குறிப்புரை எழுதப்பட்டது.

இதனைக் கலைமகளில் வெளியிடுவித்த இப்பத்திரிகையின் அதிபரும் நிர்வாகப்பத்திரிகாசிரியருமான ஸ்ரீமான் ரா. நாராயணஸாமி ஐயர், பி. ஏ., பி. எல். அவர்களுக்கு இதன்முகமாக எனது நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

'தியாகராஜவிலாஸம்'
திருவேட்டீசுவரன் பேட்டை,
12—1—35.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

உ

கணபதி துணை

# திரு இலஞ்சி முருகன் உலா

---

## காப்பு

(வெண்பா)

ஏர்கொண்ட தென்னிலஞ்சி யீசன் குருபரன்மேல்
சீர்கொண் டுலாமாலை சேர்க்கவே—நார்தருமால்
ஐந்துகர நால்வாய்முக் கண்விழி யோரிருதாள்
எந்தை யொருமருப்ப னே.

2. ஒண்டா மரைமலர்த்தாள் வேல னுலாத்தமிழ்க்குத்
தண்டா மரையாள் தமிழ்முனிவன்—பண்டருமோர்
அப்பன் முதன்மூவ ரானதிரு வாசகத்தேன்
அப்பனுமே காப்ப ரடுத்து.

---

## நூல்

(கலி வெண்பா)

[முருகக்கடவுள் திரு அவதாரம்]

சீர்கொண்ட மாலுந் திசைமுகனுந் தேவர்களும்
கார்கொண்ட கந்தரனைக் கைகுவித்தே—ஏர்கொண்ட

---

காப்பு : 1. நார் - அன்பு. மாலை சேர்க்க என்பதற்கேற்ப நார்தருமால் என்றது ஒருநயம் ; நார் - மாலைகட்டும் நார்.

காப்பு : 2. தண்டாமரையாள் - கலைமகள். தமிழ்முனிவன் - அகத்தியர். அப்பன்முதல்மூவர் - அப்பர், சம்பந்தர், சுந்தரர். திருவாசகத்தேனப்பன் - மாணிக்கவாசகர். திருவாசகத்தேன் : " திருவாசகமென்னுந் தேன் " பழம்பாடல்.

கண்ணி, 1. கார்கொண்ட கந்தரன் - சிவபெருமான்.

2. நாடெங்கே யெங்கடிரு நங்கைமா ரெங்கேயெம்
வீடெங்கே யென்று மெலிவுரைப்ப—வாடுமுங்கள்

3. வாட்டங்க ளெல்லா மதலை தவிர்ப்பனென்று
நாட்டமிசை யோராறு நற்பொறிகள்—ஈட்டியே

4. அக்கினிநல் வாயுகங்கை யாம்வா கனமீதில்
உய்க்கச் சரவணத்தி னுள்ளுருவாய்த்—தக்கபுகழ்

5. ஆராறு மீன்முலைப்பா லாரவுண்டு வாழுஞ்சாற்
சீரார் சிவபெருமான் றேவியுடன்— பேரான

6. பொய்கைக் கரையிற் புகுதுங்கான் மைந்தரைக்கண்
டைய னனுக்கிரகத் தாலெடுத்தே—மெய்யுமையாள்

7. ஈராறு காலை யிருகாலாத் தானிருவிப்
பேராத வன்பாற் பிரியமுற்றுள்—சீராளன்

8. அஞ்சுமுகம் போதாவென் றாறுமுகத் தோடெழுந்து
வஞ்சச்சூர் மாய்க்கவந்த வான்பொருளான்—தஞ்சமுற்ற

## [தலப் பெருமை]

9. பின்னவர்க ளோடே பிரியமுறு மந்நாளும்
தென்னிலஞ்சி யாகச் செழித்ததலம்—மின்னயிலான்

10. வெள்ளிக் கயிலை விளையாடு மப்பொழுதும்
உள்ளக் களிப்பா லுகந்ததலம்—தெள்ளுமறைப்

11. பூமேவு நான்முகத்தோன் பொன்னிலஞ்சி யென்றுதிரு
நாமேவு வாக்கா னவின்றதலம்—காமேவு

---

2. எங்கே எங்கேயென்றது இழந்தோம் இழந்தோமென்றபடி.

3. நாட்டம் - நெற்றிக்கண்.

5. மீன் - நட்சத்திரம்; கார்த்திகைப் பெண்கள்.

6. பொய்கை - மானிடராக்காத நீர் நிலை.

7. இருவி - இருத்தி. பிரியமுற்று ஆள்.

6-7. "கையா நின்ற சிறுமருங்கு னங்கை யுமையாள் பாமனொடு - நறு நீர்ப் பொய்கைத் தடங்கரைவாய் நண்ணி முகமா றினுக்கேற்பக், கையா றிரண்டு புரிந்ததுபோற் காலா றிரண்டு செய்யாது - கருதி யிரண்டே செய்தனண்முற் கடையேஞ் செய்த நல்வினையால்" திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ், சிற்றிற். 9.

8. "சூரர்பெருங் குலத்தை மாய்ப்ப, அஞ்சுமுக மமையாவென் றாறு முக மாகவெழுந் தருளி னனே" திருக்குற்றலத் தலபுராணம், திருமால் சிவபிரானனை. 106.

9. பின்னவர்கள் - வீரவாகுமுதலிய நவவீரர்களாகிய தம்பிமார்கள்.

12. கற்பகநா டாளி கருதி யிணைமலர்த்தாள்
அற்பகலு நாடி யருச்சித்துப்—பொற்புடனே
13. போற்றுரை யெங்கோன் பொருதுவெல்லப் பொன்னுட்டை
மாற்ரு தடிவணங்கி வாழ்ந்திருந்தான்—ஏற்றூர்வாழ்
14. குற்றால மிந்தக் குவலயத்துண் டாகுமுன்னே
பற்று யிருந்த பழையபதி—கற்றோ
15. டந்நாட் கயிலைக் கயன்வருங்கால் வேதத்தின்
முன்னும் பொருளை மொழிகென்ன—என்றாலே
16. ஊகமில்லை யையா வுனதுசித்த மென்றுரைக்கச்
சேகரத்திற் குட்டிச் சிறைப்படுத்தி—வாகயிலான்
17. அண்டபகி ரண்ட மசரஞ் சரங்களெல்லாம்
உண்டுபண்ணு முன்னே யுகந்துகந்து—பண்டுதம்பு
18. கோயில் படைத்துக் குலவு மதில்படைத்து
வாயிலொரு நான்கு வகைபடைத்துத்—தாயினிலும்
19. அன்பு படைத்த வரிய குடிபடைத்தே
இன்பம் படைத்த வெழில்படைத்து—முன்பெல்லாம்
20. வாழை பலாப்படைத்து மாங்கனிகள் தேன்பிலிற்றப்
பாளைக் கமுகு பலபடைத்து—வேளையே
21. நேராம் புருடரெலா நேரிழையா ரேயிரதி
யாரா மெனவே யருள்படைத்துச்—சீரான
22. நீதிமன்னர் செங்கோ னெறிபடைத்துப் பைந்தொடிமார்
காதலுறுங் கற்புக் கதிபடைத்து—மாதங்கள்
23. மும்மழைகள் பெய்யு முறைபடைத்துப் பைங்கூழ்கள்
செம்மைபெற வோங்குந் திருப்படைத்து—மும்மைபெறத்

---

12. கற்பகநாடாளி - இந்திரன். 13. பொன்னுட்டை வெல்ல.

16. ஊகம் - அறியும் ஆற்றல். சேகரத்தில் - தலையில். வாகு - அழகு.

20. வேளை - காமனை.

22-3. மன்னர் செங்கோல்நெறியும் மகளிர் கற்பும் மழை பெய்தற்குரிய காரணங்களாதலின் அவற்றை முறையே கூறினர்; மழைபெய்யாமைக்குக் காரணங்களைக் கூறுகின்றபொழுது, "செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ, கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோ, நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம், அலத்தற் காலை யாகியது" (மணி. 28 : 188 - 91) என்று சொல்லும் பகுதியால் இது புலப்படும்.

23. கூழ்கள் - பயிர்கள்.

24. தங்கையினா லள்ளியிடா தார்பிச்சை பிச்சையென்ன
எங்கோ னிருந்து படைத்தவிடம்—மங்காத
25. தென்னிலஞ்சி யென்றாற் செழிக்கும்வள மத்தனையும்
என்னி வியம்ப வெளியதோ—மன்னு

[ஆறு படைவீடுகள்]

26. திருப்பரங் குன்றமற் சேரடியார் போற்றும்
திருப்பரங் குன்றருஞ் செவ்வேள்—விருப்பான
27. சீரலைவா யாகாமற் சிந்தை நினைப்பருளும்
சீரலைவா யாளுந் திருக்குமரன்—ஆரத்
28. திருவாவி னன்குடியா மென்னச் சிறந்த
திருவாவி னன்குடிவாழ் தேவன்—பெருவாய்மை
29. ஏரகத்தா ரிவ்விடத்தா ரென்றிமையோர் தாம்புகழும்
ஏரகத் தார்வா னெழிலயிலான்—பாரகத்தில்
30. குன்றுதோ றாடுங் குலமஞ்ஞை வாகனத்தான்
குன்றுதோ றாடுங் குகப்பெருமான்—மன்றல்சேர்
31. வண்டானஞ்சோலை மலைசூ ழுலகின்மிக்க
வண்டானஞ் சோலை மலைக்கிழவன்—கண்காதங்

---

24. முன்பிறப்பில் தங்கள் கையினால் அள்ளி, இரப்பவர்களுக்குப் பிச்சையிடாதவர்கள் இந்தப் பிறப்பில் பிச்சை பிச்சையென்று இத்தலத்தில் வந்து கூறும் வண்ணம் படைத்த இடம்; என்பது பிற இடங்களிலுள்ள இரவலர்கள் இவ்விடத்திற்கு வந்து பிச்சை பெறுதற்குரிய செல்வமுடையது இத்தலமென்று குறித்தபடி; "மாசித் திங்கண் மாசின சின்னத் துணி முள்ளின், ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப், பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக், கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்" (சீவக. 929) என்னும் அருமைச்செய்யுள் இங்கே கருதற்குரியது.

26. திரு பரம் குன்றமல் சேர் - செல்வத்தின் மிகுதி குறையாமல் சேர்ந்துள்ள; பரம் - பாரம்; "உரியார், திருப்பரங்குன் றத்திருந்தான்" (136 - 7) என்பர் பின்.

27. சிறப்புக்கெடாதபடி மனத்திலுள்ள எண்ணங்களை நிறைவேற்றும். சீரலைவாய் - திருச்செந்தூர். ஆர - இருப்பதற்கு.

28. திரு வாவி நன்குடியாம் என்ன - திருமகள் தாவிவந்து இதுவே நமக்கு நல்ல வாழிடமாமென எண்ணும்படி.

28-9. பெரு வாய்மை ஏர் அகத்தார் - பெரிய சத்தியத்தையும் அழகையும் உடைய நெஞ்சினர்.

31. வள் தானம் - வளவிய இடங்களும். வண்டு ஆல் நம் சோலைமலை; ஆல் - ஒலிக்கின்ற.

32. சோராறு மோராறு மோராறு மோராறும்
ஈராறு கையு மினிதுடையான்—ஏராரும்
33. வெள்ளிக் கொடிபடர வாய்த்த தனிக்கொம்பு
தெள்ளமுதத் தெய்வச் செழுங்கொடிக்கு—மெள்ளவே
34. ஏறுங் குமார விளங்கொம்பு மேற்குடைய
ஆறுடைய தென்னிலஞ்சி யாறுமுகன்—வீறியதோர்

[அகத்தியர் தென்பால் வருதல்]

35. தெக்கணபாற் கும்பன் றிரும்பி வரும்வழியில்
அக்கணமே விந்தா சலமடக்கி—மிக்கதொரு
36. வில்வலன்வா தாவியையும் வென்றுபுவி மீதினிலே
சொல்லரிய காவேரி தோற்றுவித்து—நல்லதொரு

[அவர் இலஞ்சியில் இருவாலுகேசனைப்
பிரதிட்டை செய்து பூசித்தல்]

37. தென்னிலஞ்சி மேவிச் சிவகுருவைப் பூசித்தே
மன்னுதிரு வெண்மணலை வாணித்துச்—சென்னி
38. வணங்கிச் சிவபூசை வாய்த்ததெனப் போற்றிக்
குணங்குறிகள் காணக் கொழுந்தை—இணங்கியே
39. பின்னு மகிழ்ந்து பிரியமுட னெப்படியே
துன்னுசிவ பூசை தொடுத்தியற்றி—இந்நிலத்தில்
40. என்று மழியா தெழுபுவிக்குங் கீழ்வேராய்
நின்றநிலை கண்டு நிலைகலங்கி—அன்று
41. பெருமை யிருவரையும் பேரன்பு மொன்றா
இருவாலு கேசனென வேத்தி—அருமையாய்

---

31-2. கண் ஓராறும் ஓராறும் காது ஓராறும் ஓராறும் என முறையே கூட்டுக.

33. தெய்வச் செழுங்கொடி - தெய்வயானையம்மையார்.

35. கும்பன் - அகத்தியமுனிவர். இக்கண்ணி முதலியவற்றிற் கூறப்பட்ட செய்திகளின் விரிவைத் திருக்குற்றலப் புராணம், திருமால் சிவபிரானான சருக்கத்திற் காணலாம்.

37. சிவகுரு - முருகக்கடவுள். வாணித்து - அமைத்து; பாணித்தென் பதன் திரிபு.

37-41. "குருவாங் குகவே ளருள்பெற்றுக் கும்ப முனியன் றிரவி லொரு, திருவா லுகத்தாற் சிவபூசை செய்து மறுநாட் சிறுகாலை, ஒருவா லுகத்தாற் பூசனைசெய் துபய வடிவு மொன்றாக்கி, இருவா லுகநா யகனெனவே யியற்றி யாரா தனைபுரிந்தான்" திருக்குற்றலப்புராணம், திருமால் சிவபிரானான. 124.

42. நாதமாய் விந்துவாய் நாதவிந்து வுங்கடந்த
போதமாய் வேதப் பொருளாகிச்—சோதிபெறு
43. சுத்தவித்தை யீசுரமாய்ச் சொல்லுஞ்சா தாக்கியமாய்ச்
சத்திசிவ மானசிவ தத்துவமாய்—வித்தியா
44. தத்துவங்க ளேழுமாய்ச் சாருமறு நான்கான
சித்திபெறு மான்மதத்வச் செய்தியாய்—முத்திபெறு
45. பஞ்ச கலையாய்ப் பகர்மூல மந்திரமாய்
விஞ்சு கலாதிகளாய் மேவியே—செஞ்சொல்
46. அயனு யரியா யரியயனுங் காணு
இயலா ரிருவாலு கேசன்—நயமாய்
47. அவ்வனவனு மல்லா லதுவுமா மெங்கோன்
இவனு மிருவாலு கேசன்—சிவமணமே
48. வீசும் படிக்கு விளங்கியதன் றன்மார்த்த
ஈசுரனை யங்க ணிருத்தியே—தேசுபெறு

[அவர் திருக்குற்றாலமடைந்து திருமாலைச் சிவபிரானாக்கல்]

49. தென்பாலே குற்றாலஞ் சென்றுதிரு மாலையவன்
அன்பாலே யென்பாலே யாகவென—முன்பாலே
50. போற்றிமகு டாகமமே பூண்டபரார்த் தப்பூசை
ஏற்றி லிருப்பவனே யென்றுதான்—சாற்றியே

---

42. "நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த, போதமுங் காணாத போதமாய்" கந்தர் கலி. 2.

43. சுத்தவித்யாதத்துவம், ஈசுவரதத்துவம், சாதாக்கிய தத்துவம், சிவதத்துவமென்னும் ஐந்தும் சிவதத்துவமாகும்.

43-4. வித்தியாதத்துவமேழாவன, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை.

ஆத்துமதத்துவம் இருபத்துநான்கு: அந்தக்கரணம் நான்கு, ஞானேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பூதம்ஐந்து.

45. பஞ்சகலையாவன: நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்தியை, சாந்தி, சாந்தியாதீதமென்பன.

மூலமந்திரம் - பிரணவம். கலாதிகள் - கலை முதலிய ஆறு அத்துவாக்கள்; அவை மந்திரம், பதம், புவனம், தத்துவம், கலை என்பன.

48-9. என்பாலே ஆக - என் பங்கிலே ஆக; என்றது சிவபிரானாகவேண்டு மென்று விண்ணப்பித்ததைக் குறிப்பித்தது.

50. மகுடாகமம் திருக்குற்றாலத்துக்குரியது; "கூறுமவர் கோலமொடு கோயிலிடை யேகி, வீறுதமி ழாலரியை வேதமனு வாலே, ஆறுபுனை வேணி

[அகத்தியமுனிவர் துதிசெய்தல்]

(திருக்குற்றலப் பெருமை)

51. சத்தா யசத்துமாய்ச் சத்தசத்து மாகியொரு
சித்தாய் விளையாடுஞ் சீர்மழுவோய்—நித்தமாய்

52. மண்ணாகி நீராய் வசுவாகி வாயுவாய்
விண்ணாகி யோங்கும் விளக்கொளியாய்ப்—பெண்ணாகி

53. ஆணா யலியா யசரஞ் சரமாகி
ஊணாகி யுண்ணு முடலுயிராய்க்—காணாத

54. ஆதியாய்ச் சோதியா யாதியந்த மில்லாத
பூதியா யைம்முகத்துப் புத்தேளாம்—நீதி

55. வடவருவித் தீர்த்த மகிமையாய் போற்றி
திடமுடைமும் மூர்த்திசீர் போற்றி—அடலுடைய

56. தென்றலங்கால் சொண்டுபவத் தீயமறை யோன்பாவம்
அன்றுதான் போக்கு மருள்போற்றி—குன்றுசூழ்

57. வானோர் சிவத்ரோக மாய்த்தவர்கள் விடுபெறத்
தானே யருட்கமைத்த தாள்போற்றி—கானோர்

58. நரிவேட னோர்வலத்தா னுதாந்த வீடு
புரிவா யளித்த புகழ்போற்றி—கரிவிருப்பாம்

---

யா னுதல்புரி பூசை, எறுமகு டாகமமெ னுவருள்செய் தானல்" திருக்குற்றலப். திருமால். 115.

52. வசு - அக்கினி.

54. பூதி - செல்வம்.

55. வடவருவித் தீர்த்தம் - இது திருக்குற்றலத்திலுள்ள தீர்த்தங்களுள் ஒன்று. இதன் வரலாற்றைத் திருக்குற்றலத்தலபுராணத்திலுள்ள 'வடவருவிச் சருக்கத்தாலுணரலாம். "வடவருவி யானே மலப்பாழுஞ் சேற்றில், நடவருவி யானே நமை" (திருக்குற். சிலேடை.) மும்மூர்த்தி: திருக்குற்றால நாதர் பிரமாவாகவும் திருமாலாகவும் சிவபிரானுகவும் ஆயினமையின் மும்மூர்த்தியென வழங்கப் படுவார்; "நிமலனே யத்தலத்து மூவராய் முத்தொழிலு நியமித் தானே" திருக்குற்றலப். மூர்த்தி. 12.

56. தென்றலங்கால் - தென்றற்காற்று. தீயமறையோ னென்றது ஆத்திரேயனென்னு மந்தணனை. இதிற் கூறப்பட்ட வரலாற்றின் விரிவைத் திருக்குற்றலப்புராணம், மந்தமாருதச் சருக்கத்தாலறிக. குன்று - திரிகூட மலையை. சூழ் - வலஞ்செய்த.

57. வானோர் சிவத்துரோகமென்றது, சிவபிரானையவமதித்த தக்கன் செய்த வேள்விக்குச் சென்ற துரோகத்தை; திருக்குற்றலப்புராணம், தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம் பார்க்க.

58. நரியும் வேடனும். இதிற் கூறப்பட்ட வரலாறு திருக்குற்றலப் புராணம், வேடன் வலம் வந்த சருக்கத்தாலுணரப்படும்.

59. பூசைக்கு வீடளித்த புண்ணியா போற்றியொரு
பேசு கவிப்பன் பிழைபொறுத்துத்—தேசுபெறு

60. வீடளித்தாய் வேதியன்றன் மெய்த்தாதைக் காநரகக்
காடொழித்தாய் போற்றி கழல்போற்றி—சாடுநற

61. வுண்ட மறையோன்ற னுட்சிறந்த பாவமெலாம்
கண்டறுக்குந் தீர்த்தக் கரையானே—வண்டணுகாச்

62. சோலையாய் போற்றி துணருடைய பொன்னிதழி
மாலையாய் சித்ரசபை வாணனே—சாலப்

63. பொறுமை யருட்கடலே போற்றியென வேத்திக்
குறுமுனிவன் போற்றியகுற் றாலம்—திறமாக

[முருகக்கடவுள் பெருமை]

64. ஏர்வலப்பால் வாழ விருவானு கேசுரனார்
சீரிடப்பால் வாழ்வு சிறக்கவே—ஓரிலஞ்சி

65. தன்னில் நடுவாழுஞ் சண்முகசிந் தாமணிநீள்
தென்னிலஞ்சி மேவுந் திறற்கடம்பன்—பன்னித்

66. திருமுருகாற் றுப்படையைச் செப்பியநக் கீரன்
வெருவு பயந்தவிர்த்த வீரன்—மருவாத

67. சிங்கமுக னானைமுகன் தீயவொரு சூரபன்மன்
அங்கவரை மாய்த்த வறுமுகவன்—நங்கமுறப்

---

58-9. சைவ புராணம் யானைபூசித்த சருக்கம் பார்க்க. "தந்த வாரணம் போன் முத்திவீடு புரக்க நெஞ்சே" (திருக்குற். அந்தாதி.) கவிப்பன் - கண்டக சேதனென்பவன்; இவன் பிழையைப் பொறுத்து வீடளித்தது சைவ புராணத்துள்ள கண்டகசேதனச் சருக்கத்தால் விளங்கும்.

60. வேதியன் - சுகுற்சன்; அவன் தாதை கவுற்சன். இவ்வரலாற்றை சைவ புராணத்துள்ள கவுற்சனச்சருக்கத்தால் உணர்க.

60-61. நறவுண்ட மறையோன் - தருமசாமியென்பவன். தீர்த்தம் - வடவருவிவந்து வீழுந்தடாகம்; தருமசாமிச்சருக்கம் பார்க்க.

61-2. வண்டணுகாச்சோலை - சண்பகச்சோலை, இதழி - கொன்றை. சித்ரசபை - திருக்குற்றாலத்துள்ள சபை; இஃது இரத்தினசபை முதலிய ஐந்தனுள் ஒன்று; "ஆதியாம் பரையலது நன்னகர்ச்சிற் பொதுநடன மாருங் காணார், காதலாற் சுரர்முனிவர் பலகாலந் தவம்புரிந்து கண்டவாற்றாற், போதினான் முகன்மூலப் பரைபரம னியந்திரங்கள் பொறித்தா னன்றே, வாதரா யணன்முதலோர் சித்திரமன் றெனுநாமம் வழங்கி னரால்" திருக்குற்றலப். திருநடச். 39.

65. சண்முகசிந்தாமணி: "பெண்கொடியா மிருதிக்கு நடுவளர்சிந் தாமணி" திருக்குற்றலப். திருமால். 100.

67. ஆனைமுகன் - தாருகாசுரன்.

கரு. துன்ன நடத்துவதுந் தொக்கபடை தற்சூழ
மன்னரென வந்த விறமாப்பும்—இந்நிலமேல்

கசு. உன்னுமந் தானுமெத்த வுண்டுபெரு மானென்னல்
தன்னுமம் பெற்றபலத் தாலன்றோ—மன்னுகலைக்

கஎ. கோட்டு முனிவனுக்குன் கோட்டி லொருகோடு
நாட்டுசென்னி மேலிருந்த நல்வரத்தால்—மோட்டு

கஅ. மகரக் கடலுறங்கு மாலை யயோத்தி
நகரிற் புகவழைத்தா னடிச்—செகதலத்தில்

கக. வின்னுமந்தி மானென்று மிக்கசந்தி மானென்றும்
வள்ளல்கட்குப் பேர்கொடுத்த வச்சயமே—எள்ளாத

உ0. மின்வண்ணப் பின்னலான் வேதண்ட கூடத்தே
பொன்வண்ணத்தந் தாதிபோந் துரைப்போன்—உன்வண்ணப்

உக. பேர்படைத்த சேரமான் பெற்றபே றிவ்வுலகில்
ஆர்படைத்தார் வேந்த ரருங்கலையே—கூரும்

உஉ. இருளுடு மூடாம லேவிளங்கச் செய்வ
தருணோத யத்தினா லன்றோ—அருணமே

உங. வஞ்சனை செய்காள மாமுனிவ னேவலினால்
எஞ்சலில் பூத மெழுந்துருத்துப்—பஞ்சவரைக்

உச. கொல்லவந்த போதவரைக் கொல்லாம லேபுரந்த
வல்லமை மாயனுக்கும் வாராதே—சொல்லுகின்ற

---

கசு. பெருமான் - பெருமையையுடையான், பெரிய மான். தன்னுமம் - உன்னுடைய பெயர்.

கக-அ. கலைக்கோட்டு முனி - ரிச்யசிருங்கர். அவர் தசரத சக்கரவர்த்திக்காகப் புத்திரகாமேஷ்டியாகம் செய்தவர்.

கக. அந்திமான் சந்திமானென்பவர்கள் இடையெழு வள்ளல்களைச் சார்ந்தவர்கள். வச்சயம் - மான்.

உ0. பின்னலான் - சிவபெருமான். வேதண்டம்-கைலை.

உஉ. அருணம் என்பது மானுக்கும் பெயர்; அரிணமெனவும் வழங்கும்; பரிதி யென்பது பருதி யென்று வழங்குதல் போல.

உங-ச. காளமாமுனிவன் - துரியோதனுதியர் ஏவலின்படி யாகம் செய்த முனிவர். இங்கே சொல்லப்பட்ட வரலாற்றைப் பாரதம் நச்சுப் பொய்கைச் சருக்கத்தால் உணரலாம்.

உரு. எள்ளவரை தானடக்கி யிரக் கடலையுண்டாய்
உள்ள கலைமுழுது மோங்கநின்றாய்—புள்ளிபெற்ற

உசு. பொன்னுழையே கும்பனுக்குப் போதித்த தோமுனிவன்
தன்னுழையே நீபடித்த சாதனையோ—இந்நிலமேல்

உஎ. மான்றேச மென்றுமதில் வாசிமெத்த வாசியென்றும்
தான்றேசஞ் சொல்வதென்ன தப்பிதமோ—கான்றேசம்

உஅ. சொந்தமென்று பன்மிருகஞ் சூழ்ந்தாலு மென்னதென்று
வந்து மொழிய வழக்குண்டோ—சந்ததமும்

உகூ. தேனூருஞ் சோலை செறியுங் கலையூரோ
மானூரோ நீயிருக்கும் வானகரம்—கானூரும்

௩0. பொன்னம் பலத்தே புலிபாம் பிருத்தலினால்
உன்னம் பலத்தினுக்கே யொப்பாமோ—தன்மையாய்

௩க. நாடுநக ரம்பலமெந் நாளுமுன்பேர் பெற்றதுபோற்
கூடுமோ காவலர்க்குங் கூடாதே—நீடுசெய

௩உ. மாதினை நீ தாங்கு மகிமையன்றி மற்றவட்கு
மேதினியிலுண்டோ விசேடமே—மோதுதெவ்வர்

௩௩. கிட்டுஞ் சமர்க்குடைந்து கெட்டோருன் பேர்கண்டால்
வெட்டுந் தலையும் விலகுவார்—அட்டதிக்காம்

---

உரு-சு. மானுக்கும் அகத்திய முனிவருக்கும் சிலேடை. எள் அவரை தான் அடக்கி - எள்ளையும் அவரையையும் தின்று உள்ளே அடக்கி; எள்ள வரைதான் அடக்கி-யாவரும் இகழ்வதற்குரியதாகும்படி விந்தமலையை அடக்கி. கடலை - கடலையை, சமுத்திரத்தை. கலை - மான்கள், நூல்கள். சாதனை-பயிற்சி.

உஎ. வாசி - குதிரை. கான்தேசம் - காட்டிடம்.

உஅ. மிருகமென்னும் பெயர் மானுக்குண்மையை நினைந்து இங்ஙனம் கூறினர்.

உகூ. கலையூர் மானூரென்பன இப்போது சேதுஸம்ஸ்தானத்திலுள்ள ஊர்கள்.

௩க-உ. செயமாது - துர்க்கை; அவள் வாகனம் மான்; இதனைக் கலையானத்தி யென்னும் பெயராலறிக.

௩உ. தெவ்வர் - பகைவர்.

௩௩. பேர் - புல்வாய்; பகைவருடைய வாயிற் புல்லைக்கண்டால்; புற்கௌவிய பகைவரைக் கொல்லாமல் விடுவது இயல்பு; "பகைவர் புல்லார்க" ஐங்குறுநூறு, 4.

௩௪. தானங்காக் குந்தேவா தாழ்குழலா ராடவர்க்கு
மானங்காக் குந்துரையே வான்பிணையே—கானமுனி

௩௫. சாபத்துக் கஞ்சுவாய் சாலமொழி வார்கண்டால்
நீபத் தடிவிலகி நிற்பாயே—கோபத்திற்

௩௬. பாண்டுவெனுஞ் சந்த்ரகுலன் பார்முழுது மோர்குடைக்
ஆண்டுபுகழ் கொண்ட வரசர்கோன்— தாண்டுகலை [கீழ்

௩௭. மானையெய்த தீவினையால் வானகரி ஞடிழந்து
கானடைந்து வானுலகங் கைக்கொண்டான்—ஞானமுனி

௩௮. வேத வியாசன் விரித்துரைத்த பாரதத்தில்
ஓதுகதை பொய்யோ வுலகறியும்—ஆதலினுற்

௩௯. கோல வரிப்புலியைக் குஞ்சரத்தைக் கொன்றமுயல்
காலின்மிதித் தோனுன்னைக் கைக்கொண்டான்—ஞாலத்

௪0. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான் [தில்
சுற்றமாய்ச் சூழ்ந்து விடுமென்ற—கற்றே

௪௧. அறிதலி னுலே யபாயமா மென்று
சிறிய வரையிணங்காச் செல்வா—மறியே

௪௨. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளலென்ற—பாணித்

௪௩. தரிய வரத்தினையுண் டாக்கும் பெரிய
வரையுறவு கொண்டபுத்தி மானே—வரையாப்

---

௩௪. குழலார்க்கும் ஆடவர்க்கும். கலையென்னும் பெயர் ஆடைக்கும் மானுக்கும் உண்மையைக் கருதி இங்ஙனம் கூறினர்.

௩௪-௫. கானமுனி சாபத்துக்கு - காட்டில் உன்னை முனிகின்ற வில்லுக்கு. சாலம் ஒழிவார் - வலையை விட்டிருப்பாரை. முனிவர்களது சாபத்துக்கு அஞ்சுவாய், மாயவார்த்தைகளைப் பேசுவார்களைக்கண்டால் விலகி நிற்பாயென்பது வேருெரு பொருள்.

௩௬. சந்திரகுலத்திற் பிறந்த பாண்டு மகாராஜன்.

௩௬-௭. இதிற்கண்ட சரித்திரத்தின் விரிவைப் பாரதத்திற் சம்பவச் சருக்கத்தால் அறியலாம்.

௩௯. புலியும் குஞ்சரமும் தாருகாவனத்துமுனிவர் யாகத்தில் உண்டாக்கி விடுத்தவை; கொன்றோர் - சிவபெருமான். முயல் - முயலகன். மற்ற விலங்குகளை அடக்கினவர் உன்னை ஆதரிக்கின்றாரென்பது வேறு பொருள்.

௪௧. சிறியவரை-சிறியமலைகள்; என்பது மரமில்லாதபொற்றைகளை; சிறுமையுடையோர்களை யென்பது வேறுபொருள்.

௪௩. அரிய மேன்மையான தினையை விளைக்கும் பெரிய மலைகளை

சச. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தாரென்ற—முறையால்

சரு. துறவாகக் காயிலைக டுய்த்தே யரிதாள்
மறவாத பாக வதனே—உறநாடிற்

சசு. கட்புலங்கா ணுருபக் கால்வாதத் தைத்தாங்கி
விட்புலமு மேழ்கடலு மெத்திசையும்—பெட்புமிகு

சஎ. தண்டலமும் வெற்புஞ் சராசரமு நின்றசைய
மண்டலமும் வீதியுஞ்செல் வாசியே—கண்டுகனி

சஅ. பண்போன் மொழிபயிலும் பாவையர்க்கெல் லாமிரண்டு
கண்போல வந்த கருங்கலையே—நண்பாகத்

சகூ. தீராத வல்வழக்குத் தேருக் களவுகன்னம்
பேரான வெல்லைப் பிசகுமுதல்—ஆராய்ந்து

ருo. சுத்த னசுத்தனென்று சோதனையாய் நாக்குமழு
வைத்தோதக் கற்பித்த வல்லமைகள்—அத்தனையும்

ருக. தென்பாகை நாட்டிற் சிறந்தபுல்வாய் மாதென்றே
அன்பாகச் சொல்ல வவதரித்தாய்—இன்பாம்

ருஉ. துணையேவன் காமத் துயர்க்கடலை நீந்தும்
பிணையே கருணைப் பெருக்கே—இணையான

ருங. காது நடந்தவிரு கண்ணார்க்கு மாடவர்க்கும்
தூது நடந்தாரைச் சொல்லக்கேள்—மாதுபங்கர்

(தூது சென்றவர்கள்)

ருச. சுந்தரர்க்கப் பானாளிற் றூதுசென்றார் பாண்டவர்க்குச்
செந்திருமா றூதாகச் சென்றாரே—இந்திரற்கே

ருரு. அந்தகளன் றூதுசென்று னங்களனுக் கோதிமந்தான்
சந்து நடந்தகதை தப்பிதமோ—முந்தக்

---

நாடும் புத்தியுடைய மானே; அரியவரங்களைத்தரும் பெரியவர்களைச் சாரும் அறிஞனேயென்பது வேறுபொருள்.

சரு. அரிதாள் - தினையரிந்த தாள், திருமாலின் திருவடி.

சசு. கட்புலங்காணு ருபம் - அருபம். கால் வாதம் - காற்றாகிய வாதம்; வாதக்காலை யுடையவனென்பது வேறுபொருள்.

சசு-எ. வாயுவிற்கு வாகனம் காற்று. வாசி - வாகனம்.

சஅ. மகளிர் கண்ணிற்கு மான்கண்ணை உவமை கூறுதல் மரபு.

ருஉ. பிணை - புணை; தெப்பம்.

ருங. கண்ணார் - மகளிர்.

ருச. பானாளில் - இடையாமத்தில்.

ருரு. சந்து - தூது.

ருசு. குணமாலை ருக்குமணி கொண்டமய றீர
மணமாலை கிள்ளைதர வாழ்ந்தார்—தணவாத

## (மற்றத் தூதுப்பொருள்களின் குறைகள்)

ருஎ. வாளகண்டஞ் செல்லும் வரிக்குயிலைத் தூதனுப்பிற்
காளகண்ட நல்வசனங் காட்டுமோ—தாளமலர்

ருஅ. ஏற்கு மதுகரத்தை யேவின் மதுபாணி
நாக்குக் குழறுமே நவ்வியே—மூக்கிலே

ருகூ. கோபத்தைக் காட்டுமொரு கொண்டைமயில் போய்க்க
லாபத்தைக் காட்டுமில்லை லாபமே—சோபத்தால்

சுO. அன்னத்தைத் தூதுவிட்டா லவ்வன்னம் பாலுக்கும்
பின்னத்தைக் காட்டுமிதம் பேசாதே—சொன்னத்தைச்

சுக. சொல்லுமே யல்லாமற் றோன்ற விரித்துரைத்து
வல்லமையாய்க் கிள்ளைசொல்ல மாட்டாதே—மெல்லவே

சுஉ. எத்திசையுஞ் செல்லு மிளம்பூவை தூதுசென்றால்
கத்திகை வாங்கக் கலங்குமே—மெத்தவே

சுங. மேகங் கடுகுரலாய் விள்ளுமல்லா னின்போலப்
பாகமுட னின்சொற் பகராதே—மோகமிஞ்சிக்

சுச. கண்டுயிலும் வேளையினிற் கண்டவனி ருத்திரனைக்
கொண்டுவந்த பாங்கியென்பாற் கூடுமோ—தண்டாத

சுரு. என்னெஞ்ச மாங்கவன்பா லெய்தி யெனைமறந்து
வன்னெஞ்ச மாயிருந்தால் வாயுண்டோ—தென்மலையத்

சுசு. தென்றலைத் தூதுவிட்டாற் றென்றல் சலனகுணம்
மன்றலணி வாங்குமிங்கு வாராதே—துன்று

---

ருஎ. வாள்-ஒளி. காளகண்டம் - குயில்; விஷம்பொருந்திய கழுத்தை யுடையதென்பது மற்றொரு பொருள்.

ருஅ. மதுபாணி - தேனைக்குடிப்பது, கட்குடியன்.

ருகூ. கோபம் - இந்திரகோபப்பூச்சி, சினம். கலாபம் - தோகை, கலகம். சோபம் - சோகம்.

சுO. பிரிக்குமேயன்றிச் சேர்க்காதென்பது கருத்து.

சுஉ. பூவை - நாகணவாய்ப்புள்; மைனா. கத்திகை வாங்க - மாலையை வாங்க, கத்தியைக் கையில் வாங்க.

சுங. பாகம் - பக்குவம்.

சுச. பாங்கி - உஷையின் பாங்கியான சித்திரலேகை.

சுசு. மன்றல் - மணம். அணி - அண்ணி.

சுஎ. கலையே மணிமே கலையே தவிர்ந்தேன்
அலையைத் துரும்பா யலைந்தேன்—மலையாமற்

சுஅ. காக்கும் பிணையேயவன் காமக் கடற்கரையிற்
சேர்க்கும் பிணையே செழுங்கலையே—ஆர்க்குமிகும்

சுகூ. ஆசைதந்தோன் பேருமவ னூடு மவனூரும்
மாசில் புகழும் வழுத்தக்கேள்—தேசுதரும்

## (தசாங்கம்—பொதியின்மலை)

எ0. அம்புதமு மம்புலியு மாடரவுஞ் சென்னியின்மேற்
பம்புதலா லீசன் படிவமாய்—அம்பரமும்

எக. பொன்னுமணிக் கோடும் பொருந்திச் சிலைதிகிரி
மன்னுதலான் மாலின் வடிவமாய்—இந்நிலமேல்

எஉ. நான்முகஞ் சாகைபல நண்ணிப்பல் பூப்படைத்து
மான்மகன் போல வளஞ்சிறந்து—மேன்மை

எங. அரம்பைபலர் தற்சூழ்ந்தே யண்டருல கெய்தித்
திரம்பெறலாற் றேவேந் திரன்போல்—உரம்பயின்று

எச. சந்தனமுங் காரகிலுந் தம்மிற் றலைசிறந்து
வந்த பொதிய மலையினுன்—செந்தமிழின்

## (வைகை நதி)

எரு. ஏடேறச் சைவநிலை யீடேறத் துள்ளுபுனல்
கோடேறக் கூடல் குடியேறப்—பீடேறு

---

சுஎ. மேகலை - இடையணி.

சுகூ. வழுத்த - சொல்ல.

எ0. பொதியிலுக்கும் சிவபெருமானுக்கும் சிலேடை. அம்புதம்- மேகம். பம்புதல் - பரவுதல்.

எ0-எக. பொதியிலுக்கும் திருமாலுக்கும் சிலேடை. அம்பரம் - மஞ்சள், கடல். பொன் - தங்கம், திருமகள். கோடு - சிகரம், சங்கு. சிலை- ஒருமரம், வில். திகிரி - மூங்கில், சக்கரம்.

எஉ. பொதியிலுக்கும் பிரமதேவருக்கும் சிலேடை. நான்முகம் - நான்குபக்கத்திலும், நான்குமுகங்கள். சாகை-வேத சாகைகள், மரக்கிளைகள். பூ-மலர், பூமி. மான்மகன் - திருமாலின் குமாரராகிய பிரமதேவர்.

எங. பொதியிலுக்கும் இந்திரனுக்கும் சிலேடை. அரம்பை பலர் - வாழையும் பலரும், பல தேவமகளிர்.

எச-ரு. செந்தமிழின் ஏடு - திருஞான சம்பந்தமூர்த்தியின் திருப்பாசுரம் வரையப்பெற்ற ஏடுகள். கோடு - கரை.

௭௬. மூரிக் கயன்மகர மோதித் திரையேற
வாரிப் புனலும் வளர்ந்தேறப்—பாரித்து
௭௭. மண்டு புகழேற மாறன் வியப்பேறக்
கண்டு சமணர் கழுவேறத்—தண்டுளப
௭௮. மாடேறுஞ் சொக்கர் மதிச்சடையின் மண்ணேற
நாடேறும் வைகை நதியினுன்—சேடேறும்

(தென்பாண்டி நாடு)

௭௯. பூங்காவு மாங்குயிலும் பூட்டு மொழிக்கரும்பும்
வாங்காத கீத வரிச்சுரும்பும்—நீங்காத
௮0. வாவித் தலமும் வனச மலர்க்காடும்
காவிப் புதுமலருங் கம்பலையும்—பூவைக்கும்
௮௧. தென்மலய மாருதமுஞ் சேயிழையார் தங்குழுவும்
மன்மதனுர் பாளையந்தான் வந்ததென—நன்மைதிகழ்
௮௨. தேவேந்து நாட்டினுக்குச் செவ்விதென்று பாவேந்தர்
நாவேந்து தென்பாண்டி நாட்டினுன்—பூவேந்து

(முல்லை மாநகர்)

௮௩. வாணிக்கு நாதனவை வந்திருக்க வேணுமென்று
காணிக்கை யாய்ச்சமைத்த காரணமோ—வேணிக்கு
௮௪. வேந்த னுலகம் வெளிறிடவே வேண்டுமென்று
வாய்ந்தசெம் பொன்னுல் வகுத்ததோ—தேர்ந்துவச்ர
௮௫. வண்ண னுலகு வறியதென்று சொல்லுதற்குப்
பண்ணிச் சிறந்த படிவமோ—எண்ணுங்கால்
௮௬. மண்மகளுக் காக வகுத்தமணிப் பீடமோ
திண்மைசெறி பேரழகு சேரிடமோ—உண்மை
௮௭. தெரிந்துரைக்க வல்லவரார் சிற்பநூல் கற்ருேர்
புரிந்தசிற்ப மென்றுலகம் போற்ற—விரிந்தமணிக்

---

௭௬. கயல் வையையிலுள்ளது; மகரம் கடலிலுள்ளது. பண்டைக் காலத்தில் வையை கடலொடு கலந்ததுண்டு. பாரித்து - பரவி.

௭௭. மாறன்-கூன்பாண்டியர். ௭௮. சேடு-பெருமை.

௭௯. பூட்டும் - மன்மதன் வளைத்தற்கு நாண் பூட்டுகின்ற. மொழி - கணு; "மொழியு மினியீர்" அழகர் கலம்பகம்.

௮௧. பாளையம் - படைவீடு.

௮௩. அவை-நாளோலக்கம்; ஆஸ்தானம். வேணி-ஆகாசம்.

௮௪. வேந்தன் - இந்திரன். ௮௪ - ௫. வச்ரவண்ணன் - குபேரன்,

அஅ. கூடமு மேல்வீடுங் கோபுரமு மாமறுகும்
மாடமுஞ்சேர் தென்முல்லை மாநகரான்—நாடமிர்தும்

(குவளை மாலை)

அகூ. கண்டு நிகர்மொழியார் கண்ணு மவர்மனமும்
வண்டுஞ் செறிநீல மாலிகையான்—விண்டோர்

(குதிரை)

கூ0. மகுட முடியிடறி மாதிரமும் வானின்
முகடு நிறைபடல மூட—விகடர்

கூக. கெடியரணு நெஞ்சிற் கெருவிதமுங் கூட்டி
அடியின் குரத்துகள தாக்கிக்—கொடியவிட

கூஉ. நெட்டரவு மேனி நெறுநெறெனக் கண்பிதுங்க
அட்ட கிரிநின் றசையவே—வட்டமிட்டுக்

கூ௩. காற்கதியுங் காற்கதியே காணுமென வீரிரண்டு
காற்கதியி லைந்து கதிகாட்டிப்—பாற்கடலில்

கூச. மாதவனுங் கற்கி வடிவங் கரந்துநிற்க
ஆதவ னேழ்பரியு மஞ்சவே—நாதன்

கூ௫. வலம்புரி போலவனு மாணித்துப் போரில்
வலம்புரியுங் கோரரண வாசியான்—சலம்புரிந்து

(யானை)

கூ௬. திக்கயங்கண் மாதிரத்திற் சென்று புறங்கொடுப்பத்
தொக்கயங்க டொக்கெனவே சூறையிட்டு—மிக்க

கூ௭. சிகர வடவரையைச் சீறித் தகர்த்து
மகர வுததி மடுத்துப்—பகரும்

---

அகூ. கண்டு - கற்கண்டு. நீலமாலிகை - குவளைத்தார்; இது வேளாளர்க்குரியது.

கூ0. படலம் - புழுதித்திரட்சி. விகடர்-வேறுபாட்டையுடைய பகைவர்கள்; க0ச.

கூக. கெருவிதம் - இறுமாப்பு. கூஉ. நெட்டரவு-ஆதிசேடன்.

கூ௩. காற்கதி - காற்றினது வேகம்; காற்பாகமாகிய வேகம். ஐந்து கதி - மல்லகதி முதலிய ஐந்து; விக்கிதம் முதலிய ஐந்துமாம்.

கூச. கற்கிவடிவம் - பத்தாவது அவதாரமாகிய குதிரையின் உருவம்.

கூ௫. ரணவாசி - போர்க்குதிரை.

கூ௬. மாதிரம் - திசை. தொக்கயங்கள் - டக்கயங்கள்; தொடிகள். தொக்கு - தோல்.

கூஅ. வடவைக் கனலவித்து வான்பிறையை யெட்டித்
தடவிக் குணக்கெடுத்துத் தாளாற்—புடவிமன்னர்
கூகூ. கொத்தளத்தைக் கோட்டையினைக் கோட்டைக்குக் காக்கவைத்த
அத்தளத்தை யெல்லா மணுவாக்கி—எத்தளமும்
க00. கண்டு நடுநடுங்கக் காலனுங் கண்புதைப்பக்
கொண்டலென நின்றதிருங் குஞ்சரத்தான்—மண்டலத்தில்

(மேழிக்கோடி)

க0க. ஆர்க்கு மதியா தவர்பகையு மஞ்சவே
பார்க்கின்ற மேழிப் பதாகையான்—நீர்க்குலவு

(முரசு)

க0உ. நத்தோலும் வாரியென்ன நாதரொரு மூவரென்ன
முத்தோலுங் காட்டு முரசினன்—எத்திக்கும்

(வேற்படை)

க0ங. காற்படையுந் தேர்ப்படையுங் கைக்கிரியு மாவுமாம்
நாற்படையுஞ் சூழ ரணபேரி—ஆர்ப்பரித்து
க0ச. வெற்றிசொல்லி வந்த விகட மருவலர்கள்
கொற்றமுங் கொற்றக் குடையுமேல்—அற்றுவிழ
க0ரு. மாதரங்கம் போல மறுகிக் குதித்துவரு
மாதுரங்க மெல்லா மறுகிவிழ—மோதிவரு
க0சு. சிந்துரங்கள் கோட்டுச் சிரந்துணிந்து கைதுணிந்து
சிந்துரங்க ளாகித் திகைக்கவே—வந்த

---

கூஅ. குணக்கெடுத்து - கோணலை நீக்கி.

கூகூ. அத் தளம் - அந்தச் சேனை.

க0க. மதி ஆதவர் பகை - ராகு கேதுக்கள்.

க0உ. நத்து ஓலும் - சங்குகள் முழங்கும். நாதரொரு மூவர் - திரிமூர்த்திகள். முத்தோல் - மூன்றுநிறமுள்ள தோல்கள்; எற்றுத்தோல், எருமைத்தோல், ஆட்டுத்தோல் எனினுமாம்.

க0ங. காற்படை - காலாட்படை. கைக்கிரி - யானை. மா - குதிரை. ஆர்ப்பரித்து - முழங்கி.

க0ச. விகடமருவலர்கள்: கூ0. க0ரு. தரங்கம் - அலை.

க0சு. சிந்துரங்கள் - யானைகள். சிந்து உரங்கள் ஆகி - வலி சிந்தியனவாகி; உரம் - வலி.

க0எ. முடித்தேர்க டட்டழிந்து முட்டுந் துரங்கம்
மடித்தே வலவன் மடிய—அடுத்துநின்று

கஅ. பாரிட் டெதிர்த்த படைவீரர் சென்னிகு
பீரிட் டிரத்தம் பெருகவே—தாரிட்ட

ககூ. தோடணிய வாடணியத் துள்ளித் திரண்டுவரு
தாடணிய மோட்டுத் தனுத்துணியக்—கோடணிய

கக0. விற்றுணியச் செங்கை விரறுணிய வெற்றிசொன்ன
சொற்றுணிய நாக்குத் துணியவே—பற்றுணிய

ககக. ஒட்டகங்கள் கோடி யுருளச் செயபேரி
பெட்டகங்கள் போலப் பிறழவே—கட்டழிந்து

ககஉ. சாலையப் பட்டுச் சளப்பட்டுத் தாமிருந்த
பாலையப் பட்டும் பறிபட்டு—மூலைகொட்டக்

ககங. கட்டித் தயிரெனவே கண்டுசில பேயருந்தி
எட்டிக் கொழுப்பை யிழுக்கவே—தட்டுசிறை

ககச. வட்ட மிடுங்கழுகு வந்துகுடல் பற்றியெழல்
பட்ட மிடுங்கயிற்றுப் பாகவே—கொட்டும்

ககரு. குருதி முழுகிநிணங் கொண்டுபருந் தேகல்
கருதுங் கருடனெனக் காணப்—பெருகிவரு

ககசு. நன்னீ ரெனவொருபேய் நாடித் தசையருந்திச்
செந்நீர் குடித்துத் திகைக்கவே—துன்னி

ககஎ. வறட்டுக் கிழட்டுப்பேய் வாய்க்கொழுப்பை நோண்டிக்
கறட்டுப்பேய் தின்று களிக்க—முறட்டுப்பேய்

ககஅ. வாங்கித் தினுந்தசையை வந்தொருபேய் தட்டிவிட
ஏங்கிப் பசியா லிருந்தலற—ஆங்கொருபேய்

---

கஎ. தட்டு - தேரின் உறுப்பு. வலவன் - தேர்ப்பாகன்.

கஅ. குபீரிட்டு - பொங்கி.

ககூ. மோடு - உயரம். கோள் - கொள்கை.

கக0. பல் துணிய. ககக. பெட்டகங்கள் - பெட்டிகள்.

ககஉ. சாலையப்பட்டு - குடிசைகள் இருக்குமிடம்; இவை கைந்நிலையென வழங்கும். சளப்பட்டு - கலக்கப்பட்டு. பாலையப்பட்டு - படைதங்கிய இடம்.

ககச. பட்டம் - காற்றாடி. பருந்து வெள்ளை நிறம்; கருடன் செந்நிறமுள்ளது.

ககசு. தசையருந்தி நன்னீரெனச் செந்நீரைக் குடித்து.

ககஎ. கறட்டுப்பேய் - குள்ளமான பேய்.

கககூ. பேய்ப்பொட்ட லிட்ட பெருங்களத்திற் றின்றதசை
வாய்ப்பட்ட தென்று மகிழுவே—கூப்பிட்டே

கஉ0. அன்று கலிங்கத் தமர்க்களத்துக் கொப்பாக
இன்று கிடைத்த தெனப்புகலத்—துன்றுபல

கஉக. கூளி நடனமிடக் கொக்கரித்தே யுக்ரசெய
காளி மகிழக் கவந்தமிரு—தாள்பெயரக்

கஉஉ. காகம் பருந்து கழுகுநிழற் பந்தரிட
மாகமின்னூர் கல்யாணம் வாய்த்ததென—ஓகைபெறச்

கஉ௩. சொல்லு மருவார் தொடியிடற வெந்நாளும்
வெல்லுமுனை கொண்டவடி வேலினன்—ஒல்லுமணி

(ஆணை)

கஉச. வட்டநெடு வேலா வலயம் விளங்குபுவி
அட்டதிசை யுஞ்செலுத்து மாணையான்—இட்டமிகச்

(வடுகநாததுரையின் பெருமை)

கஉ௫. சந்ததமுங் கோட்டிச் சவுமியநா ராயணரை
வந்தனைசெய் தொப்பமிடு வண்கையான்—நந்துலவு

கஉ௬. தென்குளந்தை மேவுஞ் செயசிங்கங் கோகனக
மின்குழந்தை போலும் விசித்திரவான்—முன்குழந்தை

கஉ௭. ஆமப் பருவத்தே யம்பொற் சுடிகைதந்த
சோமனுக்கு நேராந் துரைராயன்—பூமன்

---

கககூ. பொட்டல் - வெளியான இடம். கூப்பிட்டு - கூவி.

கஉ0. கலிஙகதேசத்தரசனோடு கருணாகரத் தொண்டைமான் செய்த போர்ச்சிறப்பைக் கலிங்கத்துப்பரணியால் உணரலாகும்.

கஉக. கூளி - பெண்பேய். கவந்தம் - தலைபோன உடம்பு.

கஉஉ. மாகமின்னூர் - அரம்பையர். போரில் இறந்தவர்கள் வீரசுவர்க்கம் அடைதலும் தேவமகளிரை அடைதலும் மரபென்று நூல்கள் கூறும்.

கஉ௩. முனை - போர்.

கஉச. வேலாவலயம் - கடல்வட்டம்.

கஉ௫. கோட்டி - திருக்கோட்டியூர். ஒப்பம் - கையெழுத்து. நந்து - சங்கு.

கஉ௬. தென்குளந்தை - சிவகங்கை. கோகனக மின் - திருமகள்; அவள் குழந்தை காமன்.

கஉ௭. சுடிகை - சுட்டி. சோமன் - சோழநாட்டுத் திரிபுவனத்தில் வாழ்ந்த ஒருபகாரி; "கையை விரித்தழைக்கக் கண்டுகுழந் தைச்சோமன், செய்யசுட்டி யீந்தான் றினகரா" தினகர வெண்பா, 26.

கஉ அ. முரசுநிலை யிட்டு முடிதரித்தே சேதுக்
கரசுநிலை யிட்ட வபயன்—வரசதுரன்

கஉ கூ. தண்டளவ மாலைச் சசிவர்ண பூபனருள்
கொண்ட னுபய குலதீபன்—மண்டலிகன்

கஙOʻ. ராச புலிவடுக நாத பெரியுடையான்
ராச னிவனுண்மை நாகரிகன்—யோசனையும்

(தலைவன் பெருமை)

கஙக. மந்திரமு மொன்னார் வணங்கத் தனுவெடுத்த
தந்திரமு நீயோகத் தன்மையும்—வந்த

கஙஉ. திரமாங் கணக்கினுட்பந் திட்ப நிதானம்
பரராச வட்டமுணர் பாங்கும்—தரம்பகுத்துத்

கஙங. திட்டவட்ட மாய்நிதியந் தேடுவதுஞ் சீமைநவ
சட்டமெனக் காக்குஞ் சமர்த்துமேல்—வட்டமாம்

கஙச. வல்லமையுங் காதல்விசு வாசமுங்கண் டேநமக்கு
நல்லமைச்ச னென்று நவமணிப்பூண்—பல்லக்குத்

கஙரு. தண்டிகை யூர்கவரி தண்கவிகை காளாஞ்சி
கண்டிகை முத்தங் கவனமாத்—திண்டிறல்சேர்

கஙசு. மத்தகெச மாதி வரிசைநல்கு மந்த்ரிதள
கத்த னுபய கனயோகன்—நித்தநித்தம்

கஙஎ. ஈகைக் கிணையென்றே வேற்றலருந் தண்ணளியோ
மேகத்தின் கால்விலங்கு வெட்டுவித்தோன்—ஆகையினல்

கஙஅ. காராள னுகினன் கங்கைசுத னுயினன்
பாராம னீலி பழிதுடைத்தோன்—பேராகச்

---

கஉகூ. சசிவர்ண பூபன் - சசிவர்ணதுரை; இவர் சிவகங்கையை ஆண்டவர்களுள் ஒருவர்.

கஙக. மந்திரம் - ஆலோசனை. நீயோகம் - நியோகமென்பதன் விகாரம்.

கஙரு. கவன மா - வேகத்தையுடைய குதிரை.

கஙசு. தளகர்த்தன் - படைத்தலைவன்.

கஙஎ. வேளாளர்களில் ஒருவர் உக்கிரபாண்டியனுற் சிறையிடப்பட்ட மேகங்களைப் பிணைகொடுத்து விலங்கு தறிக்கச் செய்தனரென்ற வரலாற்றை நினைந்து இங்ஙனம் கூறினர்.

கஙஅ. பழையனூர் நீலிக்காக எழுபது வேளாளர் தம் உயிரை நீத்த வரலாறு இதிற் குறிப்பிக்கப்பட்டது; "மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள், கூறியசொற் பிழையாது

கங௯. சூலி முதுகிற் சுடுசோ றளித்துமொரு
சூலி பசியாற்றத் தூங்கிரவிற்—சாலி

கச0. முளைவாரி யன்னமிட்டோன் முத்தமிழ்க்குப் பாம்பின்
வளைவாயிற் கைநீட்டும் வள்ளல்—இளையாமற்

கசக. பட்டாடை கீறிப் பருஞ்சிலந்தி காட்டிவெகு
நெட்டாய் விருது நிறுத்திறேன்—மட்டாரும்

கசஉ. பைந்தருவுக் கொப்பென்றே பாலிக்கு முன்கைபைச்
சந்தனமாய் வைத்தரைத்த தாடாளன்—முந்தக்

கசங. கொடுக்குங் குணமோ குழந்தைசொன்ன தென்றே
அடுக்கு மவன்மீதி லன்போ—எடுக்கும்

கசச. இருநிதியு நெல்லா யிரக்கலமுந் தந்தே
ஒருகவிதை கொண்டுபுக ழுற்றேன்—பெருமைசேர்

(அவன்செய்த தர்மங்கள்)

கசரு. கோலமிகு குன்றுக் குடியிலே நீடூழி
காலமெல்லா நிற்கவே கற்கட்டிச்—சூலத்திற்

கசசா. றன்னூற்றுக் காணத் தடாகப் பிரதிட்டைசெய்து
செந்நூற் றுறையாற் சினகரமும்—பொன்னுற்

கசஎ. படித்துறையும் பூந்தருவும் பைந்தருவும் வேதம்
படித்துறையு மண்டபமும் பாங்காய்—முடித்துவைத்தே

---

துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப னண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற் பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ" சேக்கிழார் புராணம்.

கங௯. சூலிமுதுகில் - கருப்பஸ்திரீயின் முதுகில். சோறளித்தவன் - அயன்றையென்னும ஊரிலிருந்த சடையனென்னும் உபகாரி; தொண்டை மண்டலசதகம், 10-ஆம் செய்யுளைப் பார்க்க. சூலி பசி - சிவபெருமானது பசியை.

கச0. அன்னமிட்டோன் - இளையான்குடி மாறநாயனர். வள்ளல் - நின்றைக்காளத்தி முதலியார்.

கசக. நிறுத்திறேன் : சடையப்பவள்ளல் ; தொண்டைமண்டல சதகம், 13-ஆம் செய்யுளைப் பார்க்க.

கசங. குழந்தை: இந்நூலாசிரியர் பெயர்; இளங்குழந்தை யென்பது வேறுபொருள்.

கசரு. குன்றுக்குடி - குன்றக்குடி.

கசசா. செந்நூல் - செவ்விய சிற்பசாஸ்திரம்.

கசஎ. பூந்தரு - மலர்மரங்கள், படித்து உறையும் மண்டபம்.

கசஅ. போற்றிய வையா புரியென்று பேருமிட்டு
நாற்றிசையோர் போற்றுவள்ளி நாதருக்கே—தோற்றுதினக்

கசகூ. கட்டளையுந் த்வாதசிக் கட்டளையுந் தைப்பூசக்
கட்டளையு மேநடத்துங் கங்கைகுலன்—மட்டுவிரி

கருo. சீதளியார் புத்தூர்த் திருத்தளியார் கொன்றைவன
நாதனர் வயிரவ நாதருக்கும்—சீதமலர்

கருக. நல்மங்கை பாகருக்கு நம்பும் வயிரவர்க்கும்
வல்ல திருக்கோட்டி மாதவர்க்கும்—கல்லியன்முன்

கருஉ. மண்டபமு நெய்விளக்கு மாமதிலும் வாகனமும்
தண்டலையும் வில்வத் தளமலர்கள்—கொண்டதோர்

கருங. நித்தியமை மித்தியமு நேயமாய்த் தானடக்கப்
பத்தியுட னேயமைத்த பண்பினன்—நத்துலவு

கருச. தென்பாக நேரிக்குச் சேர்ந்த வடபாலில்
வன்பாங் கரடிபுலி மான்மரைகள்—துன்பான

கருரு. கள்ளர் குடியிருக்குங் காட்டைவெட்டி நாடாக்கிப்
புள்ளலம்பு சோலை புதுக்கியே—பள்ளநீர்

கருசு. முன்பார் புகழ முனைவேந்தர் கொண்டாட
வன்பாரை வெட்டியுநீர் மல்கவே—அன்பாரும்

கருஎ. மண்டலிகன் முத்து வடுகநா தச்சமுத்ரம்
கண்டுபுகழ் கண்டமார்க் கண்டனும்—கொண்டல்

கருஅ. அரசன் பெரியவுடை யான்மகிழ்ந்து வெற்றி
புரிகின்ற சோழ புரத்தில்—திருவளரும்

கருகூ. கந்தவனப் பொய்கைக் கரையினுக்கு மேற்றிசையில்
அந்தமிகு பாற்கடலி தாமென்னச்—சந்ததமும்

கசுo. செய்கை தவறு திருந்ததிரி யம்பகப்
பொய்கைதனைக் கண்டிருந்த புண்ணியவான்—செய்திகழும்

கசுக. வைகை நதிதீர மானபரம் பைக்குடியிற்
பொய்கைசெறி கூபம் புனற்பந்தல்—மைகவியும்

---

கசகூ. கஙகைகுலன்: வேளாளர் கங்காகுலத்தினரெனப்படுவர்.

கருo. சீதளி – திருப்புத்தூர்ச்சிவாலயம். கொன்றை: திருப்புத்தூர்த் தலவிருட்சம். பைரவமூர்த்தி சந்நிதி இத்தலத்தில் விசேடமுடையது.

கருக. மங்கைபாகர்: திருக்கொடுங்குன்றத்துச் சிவபெருமான் திருநாமம். மாதவன் - ஸ்ரீ சௌமிய நாராயணப்பெருமாள்.

கருஉ. தண்டலை - சோலை. வில்வத்தளமும் மலர்களும்,

கருசு. பார் - வன்னிலம்.

கருஅ. பெரியவுடையான் - வடுகநாத துரை.

கசுஉ. நந்தவனம் பூஞ்சோலை நன்மடமு மேயியற்றி
அந்தணர் சாலை யமைத்துவைத்தே—முந்தப்
கசுங. படிக்கட் டளையாய்ப் பசித்துவந்தோர்க் கெல்லாம்
கொடிக்கட்டி யன்னங் கொடுத்தோன்—வடிக்கட்டும்
கசுச. தன்ம சரீரன் றரும சகாயனெழில்
மன்மத ரூபனடல் வாளபிமன்—நன்மைசேர்
கசுரு. தன்னை யடுத்தோரைத் தாய்போலத் தாபரிப்போன்
பின்னையெண்ணு மற்கொடுக்கும் பேராளன்—பொன்னைப்
கசுசு. புதைப்பார் மணாளன் புருடமக மேரு
சுதைப்பார் புகழ்விளைக்குஞ் சோமன்—சுதைப்புவியைக்
கசுஎ. காக்குங் கருணா கரனு மனுநீதன்
வாக்கி லிரண்டுரையா மானபரன்—ஆர்க்கும்
கசுஅ. உபகாரஞ் செய்யவென்றே யோதுநூல் கற்றோன்
அபகாரஞ் செய்ய வறியான்—சுபகாரி
கசுகூ. துட்டருக்கு நிட்டூரன் றுட்டருக்கு மார்பாணி
சிட்டருக்கு நன்மைபுரி செங்கோலான்—மட்டுவிரி

(அவயவச் சிறப்பு)

கஎ0. மாப்பதுமன் போலவே வந்தமுனி நல்யாகம்
காப்பனெனச் சென்றமலர்க் காலினான்—ஆர்ப்பரித்துச்
கஎக. சொந்தமென விந்தையுறை தோளினான் கோகனகை
வந்து குடியிருக்கு மார்பினான்—வந்தவரை
கஎஉ. வங்கணங் கட்டி வசந்தத் தியாகநல்கக்
கங்கணங் கட்டுமிரு கையினான்—கொங்கு

---

கசுஉ. சாலை - சத்திரம்.

கசுரு. தாபரிப்போன் - நிலைபெறச்செய்பவன்.

கசுசு. மணாளன் - தலைவன். அவர்களை அடக்கி அவர்கள்பொன்னைத் தனக்குப் பயன்படச்செய்பவனென்பது கருத்து.

கசுஎ. கருணாகரன் - கலிங்கப்போர் வென்ற சோழசேனாபதி.

கசுஅ. சுபகாரி - சுபத்தை உண்டுபண்ணுபவன்.

கஎ0. பதுமன் - பிரமன். முனி - விசுவாமித்திரர்; "வந்து முனி யெய்துதலு மார்பிலணி யாரம், அந்தர தலத்திரவி யஞ்சவொளி விஞ்சக், கந்தமல ரிற்கடவு டன்வரவு காணும், இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந் தான்" (கம்ப. கையடைப்.) என்பதில் விசுவாமித்திரமுனிவருக்குப் பிரம தேவரை உவமைகூறியதுகாண்க. காலினான் - இராமன்.

கஎக. விந்தை - வெற்றிமகள். கோகனகை - திருமகள்.

கஎஉ. வங்கணம் - அன்பு.

கஎ௩. பரந்த மடவார் பயோதரத்தி லேந்தும்
நரந்தம் பரிமளிக்கு நாசி—பொருந்தினேன்

கஎச. ஆனவித்தை யெல்லா மறிந்தாலுங் காந்தருவ
கானவித்தை கேட்குமிரு காதினன்—நானிலத்திற்

கஎ௫. கீர்த்தி கரித்துக் கிளைக்கின்ற சந்த்ரவிம்பம்
மூர்த்தி கரித்த முகத்தினன்—பார்த்திபரில்

கஎ௬. மூவேந்தர் போலவந்து முத்தமிழை யாராய்ந்து
பாவேந்தை வாழவைத்த பாக்கியவான்—பூவேந்து

## (தந்தை முதலியோர்)

கஎஎ. காத்தவரா யன்பாலன் காணுமைவர் பேரிடரைத்
தீர்த்தவரா யன்புபுரி சீதரமால்—பார்த்தனுக்குக்

கஎஅ. காண்டா வனதகனங் காண ரதமூர்ந்தோன்
வேண்டார் வணங்கவரி வில்லெடுத்தோன்—சேண்டாங்கி

கஎகூ. நில்லாமற் றிக்கயங்க ணேர்ந்தாலு நல்லதென்று
மல்லாட மார்புதட்டும் வல்லமையான்—நல்லாரை

கஅ0. ஆய்ந்தா தரிக்கு மறிவினன் மேருவரை
சாய்ந்தாலு மீளநடுந் தந்திரவான்—ஏந்துமலர்த்

கஅக. தேன்றொட்ட விந்திரவி தெற்குவடக் கானாலும்
தான்றொட்ட வாரந் தவறுதான்—கான்றொட்ட

கஅஉ. செய்க்குவளை நித்திலஞ்சூழ் தென்முல்லை யாதிபதி
மைக்குவளை மாலையணி மார்பினன்—திக்கு

கஅ௩. விசையஞ் செலுத்தி விருதொன்று கட்டி
இசையெங்கு மேசெலுத்து மெங்கோன்—திசையாள்

கஅச. அதுலன் குளந்தைக் கரசன் மகிழும்
சதுரனும் ராமக்ருஷ்ணன் றம்பி—மதுரமொழி

---

கஎச. காந்தருவகானவித்தை - ஸங்கீதவித்தையை.

கஎ௫. கீர்த்திகரித்து - புகழை உண்டாக்கி. மூர்த்திகரித்த - உருவு கொண்ட.

கஎஎ. தீர்த்து அவர் ஆய் அன்புபுரி சீதரமால்; அவர் - பஞ்ச பாண்டவர்.

கஎகூ. நேர்ந்தாலும் - எதிர்த்தாலும்.

கஅக. அமிர்தகிரணத்தை யுடைமையால் தேன் தொட்ட இந்து என்றார்; இந்து - சந்திரன்.

கஅஉ. செய்க்கு - வயல்களில். வளைநித்திலம் - சங்குகளிலிருந்து உண்டான முத்துக்கள்.

கஅச. அதுலன் - ஒப்பிலாதவன். குளந்தை - சிவகங்கை.

கஅரு. சொன்னவிச்வ நாதனுக்குஞ் சூரியநா ராயணற்கும்
பின்னவன் கீர்த்திப் பிரதாபன்—மன்னுகலி

கஅசு. கோபன் கவிவேந்தர் கொண்டாட வந்தபற்ப
நாபன் சசிவன்ன ராசனுக்கும்—சோபந்தீர்

கஅஎ. சோமன் குலத்தருமன் சுப்பிர மண்யனுக்கும்
சேமநிதி யான சிறுதாதை—பூமணிகா

கஅஅ. உந்துதிருப் பாற்கடலி லுற்பவித்த தண்மதிபோல்
முந்து வலம்புரியின் முத்தம்போல்—வந்த

கஅகூ. நனையகஞ்சேர் நீலமணி ராமக்ருஷ்ண மாலைத்
தனைய னெனமகிழ்ந்த தந்தை—அனகன்

ககூO. தருநமசி வாயமன்னன் றந்தகயி லாசன்
மருக னெனவந்த மாமன்—உரிமை

ககூக. அடர்ந்த கிளையா னகந்தை யறியான்
மடங்க லெனவே வயங்கொள்—படையான்

ககூஉ. தொழுந்த கைமையான் சுகந்த புயவான்
எழுந்த பிறையா யிரங்கள்—தொழுவோன்

ககூங. பரதந் திரசம் பனதந் திரசிந்
திரதன் சுமுகன் செனகன்—சரதன்

ககூச. பொருமந் தரதிண் புயமண் டலிகன்
தருவுங் கரமுஞ் சரியென்—றருளவரு

ககூரு. காரியுப காரியதி காரிவிவ காரிகுண
வாரிநிதி வாரியருள் வாரிமழை—மாரிமத

ககூசு. வாரணங் கூப்பிடுமுன் வந்தேன்வந் தேனென்ற
நாரணன் றண்டவ ராயமன்னன்—போரளவி

ககூஎ. இன்றிளைத்தாய் நாளைவா வென்றே யிராவணற்கு
நன்றுரைத்த தாண்டவ ராயமன்னன்—நின்றெதிர்த்து

---

கஅஎ. பூமணிகா - அழகிய சிந்தாமணியும் கற்பகமும்.

ககூக. மடங்கல் - சிங்கம். வயம் - வெற்றி.

ககூஉ. பிறை ஆயிரங்கள் தொழுவோன் - தீர்க்காயுளை உடையான்; ஆயிரம்பிறை கண்டோரென்று முதியோரைக் குறித்தல் ஒருமரபு; "ஆயிர மதியங்கண்ட முந்தைவே தியராத்தோன்றி" (திருவிளை. சுரு: 68); சுக : 40.

ககூங. தந்திரசிந்து - சேனையாகியகடல். செனகன் - ஜனகராஜனைப் போன்றவன்.

ககூச. மந்தரம் - மந்தரமலையைப்போன்ற. தரு - கற்பகம். சரி - ஒப்பு.

ககூரு. காரி - கடையெழுவள்ளல்களில் ஒருவன். குணவாரி - குணக் கடல். மாரி மதம் - மழையைப்போன்ற மதத்தையுடைய.

ககஅ. வன்மை புரிந்தோரும் வந்துசர ணென்றடைந்தால்
நன்மைபுரி தாண்டவ ராயமன்னன்—சொன்மருவு

கககூ. தாகரிகன் மாற்றலர்பாற் சங்க்ராம கெம்பீரன்
நாகரிகன் றாண்டவ ராயமன்னன்—மாகனகக்

உ00. கோட்டிலங்கை ராவணனைக் கொன்று விபீடணனை
நாட்டுதுரை தாண்டவ ராயமன்னன்—கூட்டுசுண்ணம்

உ0க. வல்லசுர மஞ்சரிக்கு மாலைதரு கந்தபொடி
நல்லதென்ற தாண்டவ ராயமன்னன்—சொல்லுநெறி

உ0உ. கோடா மனுநீதி கொண்டிருந்து வையைவள
நாடாளுந் தாண்டவ ராயமன்னன்—வாடாத

(தலைவன் பவனி வரத்தோடங்கல்)

உ0௩. தென்னவன்போற் பூலோக தேவேந் திரன்போல
மன்னு பவனி வருவதற்கு—முன்னமே

உ0ச. நித்திய தான நியம மனுட்டானம்
பத்தி தரும்பூசை பண்ணியே—மொய்த்தகன

உ0ரு. சுற்றம் விருந்துத் தொகுதிபல தற்சூழ
உற்ற வறுசுவை சேருண்டு—முற்ற

உ0கூ. அருந்திமலர் வாய்பூசி யாசார மீதில்
இருந்துமின்னார் கண்ணுடி யேந்தத்—துரைவடுக

(அணிகளை அணிதல்)

உ0எ. நாதமன்ன னுக்கன்றி நானிலத்து வேந்தைவணங்
காதமுடி மேற்பாகு கட்டியே—காதிலணி

உ0அ. மாணிக்க முத்து மரகதப்பூ மூவருடல்
காணிக்க வந்த கவின்காட்டப்—பூணிழையார்

உ0கூ. கூடி முருகனென்று கும்பிடவே மேற்காதில்
ஆடு முருகி னணியணிந்து—சேடுதிகழ்

---

கககூ. சங்க்ராமம் - சண்டை. ககஅ - கூ. சொல்மருவு உதாகரிகன்.

உ00. கோடு - சிகரம்.

உ0க. சீவகனென்றபடி. சுரமஞ்சரி - சீவகன்மனைவி. மாலை - குணமாலை.

உ0கூ. வாய்பூசி - வாயைச்சுத்தம் செய்துகொண்டு. ஆசாரம் - அரசிருக்கை.

உ0எ. பாகு - தலைப்பாகை.

உ0அ. மூவர் - திரிமூர்த்திகள். காணிக்க - காட்ட.

உ0கூ. முருகன் - முருகென்னும் ஆபரணத்தையுடையான், முருகக் கடவுள்.

உக0. வாக்கி லுறை வெண்கமல மாதுவெளி வந்ததென
ஆக்கமிகும் வெண்ணீ றலங்கரித்துத்—தீர்க்கமாய்ப்
உகக. பார்க்கின் முகமதியின் பாற்களங்கம் வேண்டுமென்றே
சேர்க்குங்கத் தூரித் திலதமிட்டு—நீக்கமின்றி
உகஉ. இச்சைசெறி கோகனகைக் கிட்ட திரைபோலப்
பச்சைவச்ரம் வைத்த பதக்கமிட்டுக்—கச்சையடர்ந்
உகஙு. தோங்கத் தனம்படைத்த வொண்டொடியார் காமசரம்
தாங்கரத்ன கண்ட சரந்தாங்கிப்—பூங்கரத்திற்
உகச. சங்குவளை மாலைசிந்தித் தாழ்குழலார் பின்றொடரச்
செங்குவளை மாலை திருத்தியே—பொங்குமுன்னீர்
உகரு. மாகுவலை யந்தாங்க வைத்த மணிச்சுமடாம்
வாகு வலைய மணிதரித்து—மாகர்
உகசு. சுரதருவிற் காமவல்லி சுற்றியது போல
விரலணியுங் கைச்சரடும் வேய்ந்தே—அரையிற்
உகஎ. சலவைகட்டி யொன்னார் தருங்குருதி மாந்திப்
புலவுகக்குங் குற்றுடைவாள் பூட்டிக்—கலகம்
உகஅ. நிலவுஞ் சகட நெறுநெறென வீழக்
கலகலென நீட்டுதண்டைக் காலில்—இலகுரத்ன
உககூ. மிஞ்சியிட்டுக் கொற்றம் விளக்கு மணியோசை
அஞ்சியிட்ட பேருக் கபயமென—விஞ்சு
உஉ0. வரையில் வெயிலெறிக்கும் வாறுபோற் பீதாம்
பரவுத்த ரீகம் பரித்துத்—தரணிமுற்றும்
உஉக. ஓரடி கொண்டளந்தங் கோரடி தூக்கிநின்ற
ஈரடியும் பாவடியி லேற்றியே—ஏரடர்க்கும்

---

உகஉ. கோகனகை - திருமகள். பதக்கம் - மார்பில் அணிந்து கொள்ளும் ஆபரணம்.

உகச. தாழ்குழலார் சங்குவளையையும் மாலையையும் சிந்தித்தொடர.

உகரு. மா குவலையம் - பெரிய பூமி. சுமடு - சும்மாடு. மணியாலாகிய வாகுவலையம். மாகர் - தேவர்.

உகசு. கைச்சரடு - கைத்தோற்கட்டி.

உகஎ. சலவை - வெளுத்த ஆடை. குறிய உடைவாள்.

உகஅ. கண்ணபிரானைப் பாவித்தபடி. சகடம் - சகடாசுரன்.

உககூ. மிஞ்சி - ஒருவகைக் கால்விரலணி.

உஉ0. வரை - மலை. வாறு: "வந்து நடைபயின்ற வாறென்ன" (உஉஅ) என்பர்பின். "வல்லோ னுலாவந்த வாறென்ன" (சேர்க்கநாதருலா.) பரித்து - தாங்கி.

உஉக. பாவடி - மிதியடி.

(யானையின் சிறப்பு)

உஉஉ. பாடகச் சீறடியார் பங்கயக்கை லாகுதர
ஆடகப்பொன் கூடத் தயல்வந்து—ஓடைமின்னல்

உஉங. கொண்டிருண்டெ ழூந்துநின்ற கொண்டலென்ற பண்புகொண்டு
தண்டரங்க மொண்டகும்ப சம்பவன்றி—ரண்டவங்கைத்

உஉச. தொண்டலங்கொ டுண்டெமிழ்ந்து தொந்தமென்று மன்றிலண்டர்
கண்டபண்ட ரங்கனந்த கன்கரத்தி—ரண்டுகண்பு

உஉரு. தைக்கமொத்தி ருத்ரமிக்க தட்டியட்ட திக்கயத்தின்
மத்தகத்தி னைத்தகர்த்து வட்டமிட்டெ—திர்த்தகற்கி

உஉசு. கத்திகட்டி விட்டமத்த கத்தினத்தி யைத்துகைத்துச்
சத்திரக்க ரத்தரைத்த லத்தினற்சி—ரத்தையெற்றி

உஉஎ. யுத்தரங்க மீதி லுருத்த ரணவீர
பத்திரன் போன்முசலம் பற்றியே—நித்தநித்தம்

உஉஅ. விந்தை கொலுவிருக்கும் வெற்பொன்று கான்முளைத்து
வந்து நடைபயின்ற வாறென்ன—முந்துதெவ்வர்

உஉகூ. சிந்துஞ் சதுரங்க சேனை சமுத்திரத்தை
மந்தரம் போல மதித்துவெற்றி—தந்துநின்று

(பவனிவரல்)

உஙO. நந்தா வளக்கரட நால்வாய்ப் பனைத்தடக்கைத்
தந்தா வளப்பவனி தான்வரலும்—பிந்தாக்

உஙக. குடைநெருங்கக் கோடி கொடிநெருங்கக் காலாட்
படைநெருங்கத் தாவு பரிமா—புடைநெருங்க

---

உஉஉ. ஓடை - நெற்றிப்பட்டம்.

உஉங. கும்பசம்பவன் - அகத்தியன்; அங்கை - அகங்கையை ஒத்த.

உஉச. தொண்டலம் - துதிக்கை. பண்டரங்கன் - சிவபெருமான். சிவபெருமானும் யமனும் கண்புதைக்க.

உஉரு. ருத்ரம் - கோபம். மிக்கு அதட்டி. கற்கி - குதிரை.

உஉரு - சு. கற்கியையும் அத்தியையும் துகைத்து. சத்திரக்கரத் தரை - சஸ்திரங்களையுடைய கையினர்களை; சஸ்திரம் - வாள்முதலிய படைகள். தலத்தில் - பூமியில்.

உஉஎ. யுத்தரங்கம் - போர்க்களம். முசலம் - உலக்கை.

உஉஅ. விந்தை - வெற்றிமகள்.

உஙO. கரடம் - மதம் பாய்கின்ற சுவடு. தந்தாவளம் - யானை.

உ௩உ. மள்ளர் குரவை மலிய மதாவளத்தின்
வெள்ள மிகுதி மிடைபவே—துள்ளிவிட்டு

உ௩௩. மன்னிய வார்பெலமா மல்லா ரிராசவார்
துன்னியரா வுத்தரணி சூழ்ந்துவர—மின்னுவெள்ளித்

உ௩௪. துப்பாக்கி யூழியத்தர் தோமரத்தர் கேடயத்தர்
தப்பாது விற்காரர் தற்சூழக்—குப்பாய

உ௩௫. நேரிசத்தர் வாட்காரர் நேமிதரித் தோர்களிரு
பாரிசத்துங் கேப்புலியொப் பாகவரத்—தாரிசைத்த

(வாத்தியங்கள்)

உ௩௬. ஒட்டகத்தின் கூன்முதுகி னேங்குமத குஞ்சரமேற்
கொட்டுநக ராபேரி கொண்டலின்வாய் - விட்டதிரத்

உ௩எ. தண்டகந் தாங்குந் தகுணியுங் கோடிணையும்
தொண்டகமுஞ் சல்லரியுந் துந்துமியும்—விண்டதொனி

உ௩அ. மத்தள தாள வகையுங் கிடுபிடியும்
தொத்திலகு நாக சுரத்தொனியும்—சத்திக்கும்

உ௩௯. வாங்காவுங் காளவும் வாங்கா மணிக்கொம்பும்
பூங்காமன் றாரியத்தைப் போன்முழங்க—நீங்காத

உ௪0. தம்புரு வீணை சரமண் டலம்வரியாத்
தும்புரு கானத் தொனிகூட்டப்—பம்பு

---

உ௩உ. குரவை - குரவைக்கூத்து; குரவைப்பாட்டுமாம். மதாவளம் - யானை.

உ௩௩. மன்னியவார் - மன்னியர்கள்; ஒருவகைச்சிற்றரசர்கள். ராவுத்தர் - குதிரைவீரர்.

உ௩௪. குப்பாயம் - சட்டை.

உ௩௫. நேரிசத்தர் - எறிபடையை யுடையார்; நேரிசம் - அம்புமுதலியவை. நேமி - சக்கரம். பாரிசம் - பக்கம்.

உ௩௬. நகரா - ஒருவாத்தியம். பேரி - முரசு. கொண்டலின் - மேகத்தைப்போல.

உ௩எ. தண்டு அகம்தாங்கும். தகுணி - தகுணிச்சம். கோடு இணை - இரட்டைச்சங்கு: "முன்னொற்றையிரு சங்குமுடனூத" வி. பா. நிரை மீட்சி. 5.

உ௩அ. கிடுபிடி - ஒருவாத்தியம்.

உ௪0. சரமண்டலம் - ஸ்வரமண்டலம்; "சரமண்ட லத்தி னிசையென் செவிக்கட் டனஞ்சயன்கைச், சரமண்ட லத்திசை யிற்பொருட் கேகினர் தாமதியார்" (மயிலையந்தாதி, 89.) இது சுரமண்டலமென்றும் வழங்கும்.

(மற்றச் சிறப்புக்கள்)

உசக. பாதவித மாதர் படிதம் பயிற்றச்
சுரதமட வாரயினி சுற்ற—உரதருணா

உசஉ. கட்டியத்தர் வேத்திரக் கையாற் பராக்கென்னத்
தட்டி வருஞ்சந் தடிவிலக—மட்டுவிரி

உசங. பொன்னடைப்பை காளாஞ்சி பூஞ்சிவிறி வீசுகுஞ்சம்
சொன்னடக்கை யோரேந்திச் சூழ்ந்துவர—அன்னடக்கும்

உசச. சந்த்ர கிரண சமுக மிருபாலும்
வந்ததென்ன வெண்சா மரையிரட்டச்—செந்தமிழின்

(சின்னம் ஒலித்தல்)

உசரு. நாவலர் தாருவந்தான் ராயர்மகிழ் மந்த்ரிவந்தான்
பூவலரு நீலப் புயன்வந்தான்—ஆவறரு

உசசு. பொன்னு பரணன் புகழா பரணமெனும்
கன்னுவ தாரவுப காரிவந்தான்—பொன்னுரும்

உசஎ. மாதர் மடலெழுது மால்ராம க்ருஷ்ணமன்னன்
சோதரனு முல்லைத் துரைவந்தான்—மேதினியில்

உசஅ. கொட்டமிடுங் கள்ளர் குறும்படக்கு வோன்வந்தான்
வட்டமிடு மாநகுலன் வந்தானே—திட்டெதிர்த்துச்

உசகூ. சீறுஞ் சமர திவாகரன்வந் தான்விருது
கூறும் விகடர் குடாரிவந்தான்—வீறு

உருO. சரணென் றடைந்தோரைத் தள்ளாத கங்கை
வருண குலதிலகன் வந்தான்—தருணா

உருக. கரதல பற்பநிதி காத்தவ ராயன்
வரதனையன் வந்தான்வந் தானென்—றுருதாரை

உருஉ. சின்னவொலி மேருத் திரைக்கடலி னுட்டியநாள்
மன்னுமொலி போல மலியவே—கன்னியெயில்

---

உசக. படிதம் - கூத்து. அயினி - சோறுகலந்த ஆலத்தி. தருணம்- இளமை.

உசஉ. கட்டியத்தர் - கட்டியம் கூறுபவர். வேத்திரம் - பிரம்பு.

உசங. குஞ்சம் - ஈயோட்டி. டக்கையோர் ; டக்கை - ஒருவாத்தியம். நடக்கும் - ஓடும்.

உசரு. நீலம் - குவளைமாலை.

உசஅ. மாநகுலன் - குதிரையைச் செலுத்துதலில் வல்ல நகுலனைப் போன்றவன்.

உசகூ. விகடர் - பகைவர்; குடாரி - கோடரி.

உருக - உ. தாரையின் ஒலியும் சின்னத்தின் ஒலியும்,

(குழாங்கொண்ட மகளிர் செயல்)

உ௫௩. மண்டபமு நந்தா வனமு மலர்வீடும்
கொண்ட பெருந்தெருவுங் கோபுரமும்—மண்டி விளை

உ௫௪. யாடுகின்ற பேதையரே யாதியா யேழ்பருவ
வாடுமிடை யார்கோடி மாலாகி—ஓடிவந்து

உ௫௫. கண்ட வுடன்கமலக் கைகுவித்தார் மெல்லமெல்லக்
கொண்டுநட தந்தியெனக் கும்பிட்டார்—மண்டலமேல்

உ௫௬. ஆணி லழகனிவ னென்பார் கண்காண
வேணு மனந்தமென்பார் மெல்லியலார்—சேணிக்கு

உ௫௭. மாரனோ விந்திரனோ மாமாலோ சூர்தடிந்த
வீரனோ பாருமென்பார் மெல்லியலார்—மாரனென்றாற்

உ௫௮. கன்னற் சிலையுண்டே காணரதி யோநாமும்
வன்னிப் பரியெங்கே மாரனென்றாற்—பொன்னிலகு

உ௫௯. விண்ணுடர் கோமானேல் வெள்ளைமத யானையுண்டே
கண்ணா யிரமெங்கே காட்டுமென்பார்—எண்ணாமல்

உ௬0. முன்னகத்தை யேந்து முகில்வண்ண னாமாயிற்
பன்னகத்தை யுண்ணும் பரியெங்கே—அந்நகத்தைத்

உ௬௧. தாக்குமயில் வீரனென்றாற் சந்ததமு நீங்காமற்
காக்கு மயில்வா கனமுண்டே—பார்க்கினிவன்

உ௬௨. மேழி விருதால் விருதுசின்னஞ் சொல்லுவதால்
வாழி குவளைமலர் மாலையால்—ஆழிதொட்ட

---

உ௫௩. நந்தாவனம் - நந்தவனம். மலர்வீடு - மலர்மண்டபம்; லதாக்கிருகமென்று கூறப்படும். மண்டி - நெருங்கி.

உ௫௪. மாலாகி - மயலடைந்து.

உ௫௫. தந்தி - யானையே.

உ௫௬. காண அனந்தம் கண்வேணும்; அனந்தம் - அளவின்மை.

உ௫௬ - எ. இக்கு மாரன் - கருப்புவில்லையுடைய மன்மதன். சூர்தடிந்த வீரன் - முருகக்கடவுள்.

உ௫௮. கன்னற்சிலை - கரும்புவில். இரதியையன்றி ஏனையோர் கண்களுக்குக் காமன் புலப்படான். வன்னி - கிளி.

உ௬0. முன் நகத்தை; நகம் - கோவர்த்தனகிரி. பன்னகம் - பாம்பு. பரி - கருடன். அ நகத்தை - கிரவுஞ்சகிரியை.

உ௬௧. தாக்கும் அயில் வீரன்; அயில் - வேல்.

உ௬௨. விருது - இங்கே கொடி; வேளாளருக்கு மேழிக்கொடியும் குவளைமாலையும் உரியன. ஆழி - மோதிரம்.

உ௫௯-௬௨. "இந்திர னென்னி னிரண்டேக ணேறூர்ந்த, அந்தரத்தா னென்னிற் பிறையில்லை — யந்தரத்துக், கோழியா னென்னின்

௨௬௩. ராகவன்கைத் தாண்டவ ராயமன்ன னென்றே
மாகவன மாகவே வந்துநின்ற—வேகமிக

(குழாங்களின் கூற்று)

௨௬௪. உன்கா லுரலா வுலக்கை மருப்பாக
வன்காமன் றன்சிலையை மாட்டாயோ—நன்கானச்

௨௬௫. செய்க்கரும்பு தின்னத் தெவிட்டாதோ மன்மதனார்
கைக்கரும்பு தின்றாற் கசக்குமோ—மைக்களிறே

௨௬௬. கொட்டமிடுந் தெவ்வர் குடையைச் சிதைப்பதலால்
வெட்ட மதன்குடைக்கு மாட்டாயோ—குட்டைமுனி

௨௬௭. தன்கைக் கடங்குமிந்தத் தண்கடலை நீண்டிருந்த
உன்கைக்கு மேயடக்க வொண்ணாதோ—பொன்கோட்டிக்

௨௬௮. கப்பமிடார் செய்குன்றைக் கட்டழிப்பாய் தென்மலையை
அப்பரிசு செய்யவுன்னா லாகாதோ—செப்பும்

௨௬௯. மதமோ மொழிந்திடநால் வாயிருந்துங் கூறு
விதமேதோ வேழையர்கண் மீதும்—கதமுண்டோ

௨௭௦. என்றார் நமதுபணி யெல்லாமுங் கைக்கொண்டால்
நன்றா மணமச்சருக்கு ஞாயமோ—குன்றாத

௨௭௧. வெள்ளத் தனத்தியர்கள் வஞ்சரைச் சூறைகொள்வோன்
கள்ளத் தனத்தையெங்கே கட்டுரைப்போம்--தெள்ளுதமிழ்

௨௭௨. மல்லையான் சொல்லு மதுர கவிக்கல்லால்
முல்லையா னம்பான் மொழிவானே—மெல்லியலீர்

---

முசமொன்றே கோதையே, ஆழியா னென்றுணரற் பாற்று'' என்னும் பழம் பாடல் இதன் பொருளோடு ஒத்துள்ளது.

௨௬௩. ராகம் வன் கை - செம்மையையுடைய வலிய கை.

௨௬௪. சிலையை - கரும்பாகியவில்லை. மாட்டல் - இடித்தல்.

௨௬௫. செய்க்கரும்பு - வயலில் விளையும் கரும்பு.

௨௬௬. தெவ்வர் - பகைவர். குடைக்கு - குடையைச் சிதைத்தற்கு. மாட்டாயோ - வன்மையில்லாயோ. குட்டைமுனி - அகத்தியா.

௨௬௮. தென்மலை - பொதியின்மலை; தென்றற்காற்றின் பிறப்பிட மாதலின் அம்மலையைத் தலைவி வெறுத்தனள்.

௨௬௯. நால்வாய் - நான்றவாய்; நான்குவாயென்பது தொனி. கூறு விதம் ஏதோ. கதம் - கோபம்.

௨௭௦. பணி - ஆபரணம்.

௨௭௧. தனத்தியர்கள்; தன்மைப்பொருளது.

௨௭௨. மல்லையான் - மல்லையூரிலிருந்தவன்' மல்லையென்பது மிதிலைப் பட்டிக் கவிராயர்களுக்குரிய அடைமொழி. முல்லையான் - முல்லையூரான்; என்றது இப்பாட்டுடைத் தலைவரை.

௨௭௩. அந்தமல்லர் கோட்டைகட்டி யாளுகின்றான் பஞ்சணையில்
வந்தமல்லர் கோட்டைகட்ட வாரானோ—சொந்தச்
௨௭௪. செயமங்கை வீற்றிருக்குஞ் செம்பொன் மணிக்குன்றாம்
புயமங்கை யாற்றழுவப் போமோ—பயமென்றே
௨௭௫. ஏழையர் வார்த்தைசெவிக் கேறமோ மேனியெல்லாம்
மாழையுருக் கொண்டோமோ வாருமென்னச்—சூழநின்ற

(தலைவி தலைவனது பவனி காணவருதல்)

௨௭௬. கன்னியர்க ளின்னபல கட்டுரைக்கும் வேளையினில்
மன்னுமத யானையின்மேல் வந்துநின்றேன்—கன்னற்
௨௭௭. சிலையேந்து சிங்கார தேக மதனை
மலையேந்தி யான்புரந்த மாலைத்—துலைசேர்
௨௭௮. சிவிச்சக்ர வர்த்தியைப்போற் சேர்ந்தோரைக் காத்த
புவிச்சக்ர வர்த்தியைமுன் போரிற்—சவிச்சக்ரம்
௨௭௯. ஆதவன்போ லேவிநின்றே யாரிருள்பூ ரித்துநின்ற
மாதவனை நீள்கருணை வாரிதியை—போது
௨௮௦. பரதிமிர ராசியடர் பாற்கரனை யார்க்கும்
சரதகுண சந்த்ரோ தயனை—விரவு
௨௮௧. காதலெபங் கேருகனைக் காத்தவ ராயன்
வரதனய னென மணியைச்—சருவும்
௨௮௨. விரவலர் கோளரியை விற்பனனை வாணர்
புரவலனை நீலப் புயனை—இருநிதியைக்

---

௨௭௩. பஞ்சணையில்......கட்ட : குறிப்பு.

௨௭௪. வீரமுடையார் தோளில் செயமங்கை இருப்பதாகக் கூறுதல் மரபு; "என்னேய் சிலமாத ரெய்தற் கெளியவோ, பொன்னே யனபாயன் பொன்னெடுந்தோள் - முன்னே, தனவேயென் றாளுஞ் சயமடந்தை தோளாம், புனவேய் மிடைந்த பொருப்பு." புயம் அங்கையால். போமோ - முடியுமோ.

௨௭௫. மாழையுரு - பசலைநிறம்.

௨௭௬. இன்ன பல - இத்தகைய சொற்கள் பலவற்றை.

௨௭௭. ஆன் புரந்த - பசுக்களைப் பாதுகாத்த. துலை - தராசுத்தட்டு.

௨௭௮. சிவி - சிபி. சவிச்சக்ரம் - ஒளியையுடைய சக்கராயுதத்தை.

௨௭௯. பூரித்து - நிறைத்து.

௨௮௦. பரதிமிர ராசி - பகைவர்களாகிய இருட்கூட்டத்தை. பாற்கரனை - சூரியனைப்போன்றவனை. சரதகுணம் - சரஸகுணம்.

௨௮௧. வரதனயன் - வரத்தாற்பெற்ற பிள்ளை.

௨௮௨. விரவலர் - பகைவர். கோளரி - சிங்கம். வாணர் - புலவர். நீலப்புயனை - குவளை மலர்மாலையை யணிந்த தோளையுடையவனை.

(தலைவி மயல்கொள்ளல்)

உ௮௩. கண்டேன் திருமுகைக் கண்குளிரச் சேவித்தேன்
கொண்டே னதிமோகங் கொண்டமயல்—விண்டுரைக்க

உ௮௪. இவ்வேளை நல்வேளை யென்றசொல் லும் வேளையினிற்
செவ்வேழங் கான்மீறிச் செல்லவே— வெவ்வேல்

உ௮௫. மதனம்பு பாய வரிக்கணம்பு பாய
விதனமொடு சோர்ந்து மெலிந்தேன்—பதன

உ௮௬. இடைதுவளக் குன்றமென வேந்துவளக் கொங்கை
நடைதுவள மெல்ல நடந்தேன்—புடைதழுவு

உ௮௭. விஞ்சுசகி மார்செறிந்து மேலணைத்துக் கொண்டேக
நெஞ்சு சகியே னிலைதளர்ந்தேன்—பஞ்சணையிற்

உ௮௮. சேர்த்தினர் பன்னீர் தெளித்தார் தழலினிடை
வார்த்தவெண்ணெய் போலவுள்ளம் வாடினேன்—கூர்த்துமுகம்

உ௮௯. பாராத வன்மயலாற் பாவி யுடல்வருந்தத்
தேராத வன்குடபாற் சென்றொளித்தான்—போராத்

உ௯0. துருத்திதென்றன் மாலை சுடர்மதியம் வெள்ளி
உருத்தசெழுந் தீயி னுருக்கி—விருத்தமதன்

உ௯௧. வாரி யிறைப்பதுபோல் வன்னிலவு வீசவிரா
ஒருகமே யாகி யுடலயர்ந்தேன்—பாரறிய

உ௯௨. அம்பலரும் பாரலரு மாக்கினன் மன்மதன்கை
அம்பலருக் காரவமே யாக்கினன்—அன்பு

உ௯௩. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூதென்—றகத்தறிந்தே

உ௯௪. புத்திமான் சந்து பொருந்துவாய் நீநினைந்தாற்
சித்தியா மென்றே தெளிந்துரைத்தேன்—பத்தியாய்ப்

---

உ௮௩. விண்டு உரைக்க - வெளிப்படையாகச் சொல்ல.

உ௮௫. வரிக்கண் அம்பு; அம்பு - நீர். பதனம் - பாதுகாப்பு.

உ௮௭. சகிமார் - தோழியர். சகியேன் - பொறேனுகி.

உ௮௯. பாராதவன் - தலைவன். பாவியென்றது தன்னையே. தேர் ஆதவன். குடபால் - மேற்றிசையில்.

உ௯0. மாலையிற் சுடரும் மதியம். உருத்த - வெம்மையாகிய.

உ௯௨. அம்பல் - சிலர்கூறும் பழிமொழி. அரும்புதலார்ந்த அலர்; அலர் - பலர்கூறும் பழிமொழி. அம்பாகிய அலருக்கு. ஆரவம் - பகை.

உ௯௩. இது திருக்குறள்.

உ௯௪. புத்திமான் - புத்தியையுடைய மான், அறிவுடையவன். சந்து - தூது. சித்தி - காரியம் கைகூடல்.

(தலைவி தூதுரைக்கும் சமயத்தைக் கூறுதல்)

உகரு. பூசைபண்ணும் வேளையினிற் போகேல் சமத்தான
ராசவட்ட வேளையிலு நண்ணாதே—போசனைசெய்

உகசா. தானைபதியர் தளகர்த்தர் காரியத்தர்
ஆனாத போது மணுகாதே—தானாக

உகஎ. ஒப்பமிடும் வேளையிலு மொன்னார் திறைகொணர்ந்து
கப்பமிடும் வேளையிலுங் கட்டுரையேல்—எப்புவிக்கும்

உகஅ. பேராட்டும் வாணர் ப்ரபந்தகவி வந்திருந்து
பாராட்டும் வேளை பகராதே—சீராட்டும்

உகக. உல்லாச மன்மதன்போ லொண்டொடியார் கூட்டமிடும்
சல்லாப வேளையிலுந் தானுரையேல்—வல்லாள

௩00. போசன் கொலுப்பெருக்கிப் போசனமுந் தான்பண்ணி
வீசுமலர்ச் சப்ரமஞ்ச மீதினிலே—நேச

௩0க. மிதசனங்க டற்சூழ வீற்றிருக்கும் வேளை
மதுமலர்த்தார் வாங்கிநீ வா.

---

உகரு. சமத்தானம் - ஸம்ஸ்தானம்.

உகசா. தளகர்த்தர் - சேனாபதியர். ஆனாதபோது - நீங்காத காலத்தில்.

உகஎ. ஒப்பம் - கையொப்பம். ஒன்னார் - பகைவர். திறை - கப்பப் பொருள்கள்.

உகஅ. பேரைச் செலுத்துகின்ற. வாணர் - புலவர்.

உகக. உல்லாசம் - மிக்க களிப்பு. சல்லாபம் - அளவளாவல்.

௩00. கொலு - திருவோலக்கம். சப்ரமஞ்சம் - கட்டில்.

௩0க. மிதசனங்கள் - அளவான பரிசனங்கள்.

## வாழ்த்து

(கட்டளைக் கலித்துறை)

உத்தம வேதிய ரானினம் வாழி யுயர்ந்தசெங்கோல்
முத்தமிழ் வாழி கிளைவாழ வாழிதென் முல்லைநகர்
வித்தகன் ருண்டவ ராசேந்த்ரன் வாழி விளங்குமனை
நித்தியஞ் சோபனங் கல்யாணம் வாழி நிலைபெறவே.

---

வாழ்த்து : செங்கோலும் முத்தமிழும் வாழி. கிளை - சுற்றத்தார். சோபனம் - மங்களம்.